பிங்கல நிகண்டின்

# வகையறிதல்.

பிங்கல நிகண்டின்

# சூத்திர அட்டவணை.



## குறிப்பு

இப்போது நடந்துவரும் ஐரோப்பிய யுத்தம் காரணமாக சீமையிலிருந்து அச்சுப்போடும் காகிதம் வாராமையால் இதனை ரப் காகிதத்தில் அச்சிடும்படி நேர்ந்தது. இப்பதிப்பு விற்று முடிந்தபிறகு, அடுத்த பதிப்பு நல்ல கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்படும்.

உ

கணபதி துணை.

பிங்கலந்தையென்னும்

# பிங்கல நிகண்டு.

தன்னேருறைன்கிளைன்றுகைம்பிகூடங்
களிறுவளர் பெருங்காடாயினும்
ஒளிபெரிது சிறந்தன்றளியவென்னெஞ்சே.

## சிறப்புப்பாயிரம்.

இருங்கட லுடுத்தவிம் மாநிலம் விளங்க
வரும்பொரு ளுரைத்த வகன்றமிழ் வரைப்பி
னியற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுட் கணிகல னதனிற்
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்கு மியற்சொ
லொருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி
செந்தமிழ் சேர்ந்த இசைதொறு மிசைதொறுந்
தங்குறிப் பினவே இசைச்சொற் கிளவி
வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொற்றுனுந் தஞ்
சிதைந்தன வரினு மியைந்தன வரையா
ரந்நாற் சொற்றிற மறிப முழுதுஞ்
செங்கதிர் வாய்த்தாற் றிவாகரன் பயந்த
பிங்கல முனிவ னென்னுந்தன் பெயர்நிறீஇ
யுரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
யிருப்புடை நிலைஇய வீறுசால் சிறப்பின்
வாஅன் வகையும் வானவர் வகையும்
வானிலு மண்ணிலும் வாழ்பல வு[illegible]
வின மி[illegible]ரியல்புளி வகையு
மவனி வகையு மாடவர் வகையு[illegible]

வெழுத்தாலியன்ற வடசொல் சிதைந்து வந்தாலுஞ் செய்யுளிடத்துப் பொருத்த முடையனவென்று களையாது புலவர் கொள்ளுஞ் சொல்லு மாகிய வடசொல்லுமென்ற,

அந்நாற்சொல் திறம் அரில்தப முழுதும் - அந்த நான்கு சொற்களின் பாகுபாட்டிலுள்ள குற்றங்கள் நீங்க அச்சொற்கள் முற்றும் (அரில் அரிச்சொல் ஆதலால்),

செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த பிங்கலமுனிவன் என்ன தன் பெயர் நிறுவி விருப்புடன் விரிக்கும் காலை - சூரியன் வரத்தால் வந்த திவாகரமுனிவர் பெற்ற பிங்கலமுனிவனானவன் பிங்கலம் என்று தன் பெயரைத் தன்னூலுக்குத் தந்து மக்களிடத்து அன்பு கூர்ந்து நூல் செய்யுங் காலத்தில்,

நிலைஇய வீறுசால் சிறப்பின் வான் வகையும் வானவர் வகையும் வானினும் மண்ணினும் வழங்கல் வழாத ஏனம் இல் ஐயர் இயல்புளி வகையும் - நிலைபெற்ற பெருமை மிக்க சிறப்பினையுடைய வான் வகையும் வானவர் வகையும் வானுலகிலும் நிலவுலகிலும் தத்தம் நெறியினின்று வழுவாத குற்றத்தினின்று நீங்கிய ஐயர் வகையும்,

அவனி வகையும் ஆடவர் வகையும் அவர் திறத்து அமைந்த அனுபோக வகையும் அவையவத்து அடைந்த ஆறுத இயல்பின் பணியின் செயலின் பகுதி வகையும் மாப்பெயர் வகையும் மரப்பெயர் வகையும் ஒருசொல் பலபொருள் ஓங்கிய வகையும் என்று இருள் அற ஈரைந்து ஆகி - அவனி வகையும் ஆடவர் வகையும் அவ் வாடவ) பாகுபாட்டி லமைந்த அனுபோக வகையும் தன் அகத்து உள்ள நல வகையும் முதலிய உறுப்புகளாகச் செறிதலினின்று நீங்காத இயல் பினையுடைய பணியிற் செயலிற் பகுதி வகையும் மாப்பெயர் வகை யும் மரப்பெயர் வகையும் ஒருசொற் பலபொருள் வகையுமென்று ஐயமறப் பத்து வகைகளாகப் பகுத்து அமைத்து,

மதியினின் விரைந்து மருள் அற வகுத்தனன் - தனது நுண் ணறிவால் விரைந்து ஆராய்வோர்க்குத் திரிபற இந்நூலை வகுத் தமைத்தனன் என்க.

(விசேஷ உரை) உலகு புறப்பாட் டெல்லையாதலால் 'இம்மா நிலம்' எனவும், ஆன்மாக்க ளடைதற்குரிய பொருள்கள் அறமுத லிய பொருள்கள் ஆதலால் 'அரும்பொருள்' எனவும், கிழக்கே கட லும் தெற்கே குமரியாறும் மேற்கே குடகாடும் வடக்கே திருவேங் கடமுமாகிய இந்நான்கும் தமிழ் வழங்குதற்குரிய அகப்பாட் டெல்

லைகளாதலால் தொகுத்துத் 'தமிழ் வரைப்பின்' எனவும், இயற்சொல் முதலிய நான்கும் செய்யுட்கு உரிமைபூண்டு நிற்றலால் 'உரிச்சொற் கிளவி' எனவும், செய்யுளிடுதற்குரிய சொல் அதுவாதலால் 'அனைத்தே செய்யுட் கணிகல னாதலின்' எனவும், வைகையாற்றின் வடக்கும் மருதயாற்றின் றெற்கும் கருவூரின் மேற்கும் தமிழ் வழங்கும் நிலங்களாதலால் 'செந்தமிழ் நிலத்து' எனவும், கொடுந்தமிழ் நிலத்தின் சென்று தத்தம் பொருள்களை அந்நிலத்தி லுள்ளோர்க்கு வழுவா துணர்த்துதலால் 'தம்பொருள் வழாமை யிசைக்கும்' எனவும், திரிசொற்போலாது கற்றோர்க்கன்றி யேனையோர்க்கும் பொருள் விளங்கிநிற்றலால் 'இயற்சொல்' எனவும், ஒரு பொருள் கருதியும் வேறு பொருள் கருதியும் வருந் திரிசொல் கிளி - கிள்ளை, மயில் - மஞ்ஞையெனத் திரியும் உறப்புத்திரிபும், மலை - விண்டு, விலங்கல் எனத் திரியும் முழுதுந் திரிபும் என இருவகைப்படுதலால் இவற்றைத் 'திரிசொற் கிளவி' எனவும், கொடுந்தமிழ் வழங்கும் நிலம் செந்தமிழ் வழங்கும் நிலத்தைச் சேர்ந்ததாதலால் 'செந்தமிழ் சேர்ந்த' எனவும், கொடுந்தமிழ் வழங்கு நிலங்கள் பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதலை யென்னும் பன்னிரண்டு வகைப்படுதலால் 'திசைதொறுந் திசைதொறும்' என்னும் பன்மைப் பொருள்பட வடுக்கியும், எழுத்து என்றது ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தெனவும், அது - மேரு, மணி முதலிய போல்வனவும் என்பார் 'வடவெழுத் தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த' எனவும், வடசொற் சிதைந்து வருதலுமன்றிப் பாகதமாய்ச் சிதைந்து வருவனவும் உளவாதலால் 'சிதைந்தன வரினும்' எனவும், பிங்கலனாற் செய்யப்பட்டது பிங்கலமாதலால் 'பிங்கல முனிவனெனத் தன்பெயர் நிறீஇ' எனவும், ஏனைப் பூதங்கள் தோன்ற நிலைபெறுதலால் 'நிலைஇய வீறுசால் சிறப்பின்' எனவும், இவ்வகைகள் ஒன்றோடொன் றியைபுடைமையில் இடைநிலைத் தீவகமாக 'இயல்புளி' எனவும், முன்னுள்ள திவாகரம் பாகுபாடில்லாமல் கற்போர்க்கு ஐயமுந் திரிபும் விளைத்தலால் 'இருளற மருளற' எனவும், எந்நிகண்டின் பொருளும் இந்நிகண்டினுட்பட வகுத்தமையால் 'மதியினின் வகுத்தனன்' எனவுங் கூறினா

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

பரமபதி துணை.

# பிங்கல நிகண்டு

## மூலமும் உரையும்.

---

முதலாவது

## வான்வகை.

---

சுவர்க்கத்தின் பெயர்.

1 பொன்னுலகு துறக்கமும் புத்தேளுலகும்
விண்ணுலகு மேலை யுலகும் விசும்பு
மண்ணுலகு நாகமுங் கற்பமும் வானுலகும்
வியனுலகுந் தாணமு முவணையுஞ் சுவவுஞ்
சுரிடமு முயர்நிலையுஞ் சுவர்க்கப் பெயரே

சுவர்க்கத்தின் பெயர் — பொன்னுலகு, துறக்கம், புத்தேளுலகு, விண்ணுலகு, மேலையுலகு, விசும்பு, மண்ணுலகு, நாகம், கற்பம், வானுலகு, வியனுலகு, தாணம், உவணை, சுவவு, சுரிடம், உயர்நிலை (௧௬)

மேலேழுலகத்தின் பெயர்.

2 பூலோகம் புவலோகஞ் சுவர்க்க லோகம்
மாலோகந் தவலோகம் பிரமலோகம்
சிவலோக மித்திறத்த மேலே ழுலகே.

மேலேழுலகத்தின் பெயர் — பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மாலோகம், தவலோகம், பிரமலோகம், சிவலோகம். (எ)

மோக்ஷத்தின் பெயர்.

3. கேவலங் கைவலங் கதிசித்தி மோக்கம்.

மோக்ஷத்தின் பெயர் — கேவலம், கைவலம், கதி, சித்தி. (௪)

* "பூலோகம் புவலோகம் சுவலோகம் மகாலோகம், சனலோகந் தவலோகம் சத்திய லோகமென, இத்திறத்தனவா மேலே ழுலகே" என்னும் பாடமும் உண்டு.

இதுவுமது.

4. அமுதம் பரஞ்சிவ முத்தியு மாகும்

வீடு மோக்ஷத்தின் பெயர் — அமுதம், பரம், சிவம், முத்தி (௪) கூ(௮)

ஆகாயத்தின் பெயர்

5. வெளி விசும்பு வெளியும் பரிடம்
வானங் கோவிண் மண்டில மாகினி
மீமா கங்கம் வியோமம் புட்கரம்
வான ககன நாக மந்தல குண்டல
மண்ட முலக மம்பரங் குழைநுடி
லந்தர மகல மாகாயப் பெயரே.

ஆகாயத்தின் பெயர் — வெளி, விசும்பு, வெளி, உம்பர், இடம், வானம், கோ, விண், மண்டிலம், ஆகினி, மீ, மாகம், கம், வியோமம், புட்கரம், வான், ககனம், நாகம், மந்தலம், குண்டலம், அண்டம், உலகம், அம்பரம், குழை, நுடில், அந்தரம், அகலம். (உ௯)

வெளியின் பெயர்.

6. வெடி வயல் வெள்ளிடை விடியலும் வெளியே.

வெளியின் பெயர் — வெடி, வயல், வெள்ளிடை, விடியல். (௪)

பகிரண்டத்தின் பெயர்.

7. அண்ட ரண்டம் பரண்ட மாகும்.

பகிரண்டத்தின் பெயர் — அண்டாண்டம். (௧)

அண்டகோளகையின் பெயர்.

8. கூடங் கடாக மண்ட கோளகைப்பெயர்.

அண்டகோளகையின் பெயர் — கூடம், கடாகம் (௨)

அண்டமுகட்டின் பெயர்.

9. மூதண்ட மண்ட முகட்டின் பெயரே.

அண்டமுகட்டின் பெயர் — மூதண்டம். (௧)

அண்டச்சுவரின் பெயர்.

10 பிரதிகை யண்டச் சுவரின் பெயரே.

அண்டச்சுவரின் பெயர்:— பிரதிகை (௧)

### திக்கின் பெயர்.

**11.** மாதிரந் திகைதிசை வம்பல் விசும்பே
யாசை புலமே யுலகுகோ காட்டை
யரிதமம் பரங்குப மெனத்தகுந் திக்கே.

திக்கின் பெயர் — மாதிரம், திகை, திசை, வம்பல், விசும்பு, ஆசை, புலம், உலகு, கோ, காட்டை, அரிதம், அம்பரம், குபம். (கங)

### எண்டிக்கின் பெயர்.

**12** கிழக்குத் தென்கிழக்குத் தெற்குத் தென்மேற்கு
மேற்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கென
றோதுந் திக்கெட் டாகு மெனப.

எண்டிக்கின் பெயர் — கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு. (அ)

### கிழக்கின் பெயர்.

**13.** குணக்கே பூருவ மைந்திரம் பிராசி
கிழக்கின் பெயரே யிந்திர திசையு மாகும்.

கிழக்கின் பெயர் — குணக்கு, பூருவம், ஐந்திரம், பிராசி, இந்திர திசை. (ரு)

### தெற்கின் பெயர்.

**14.** அவாசி தக்கண மியாமியந் தெக்கு
சிவேதந் தென்னவை தெற்கென லாகும்.

தெற்கின் பெயர் — அவாசி, தக்கணம், யாமியம், தெக்கு, சிவேதம், தென். (சு)

### மேற்கின் பெயர்.

**15** மேக்குப் பச்சிமங் குடக்கிவை மேற்கே.

மேற்கின் பெயர் — மேக்கு, பச்சிமம், குடக்கு. (௩)

### இதுவுமது.

**16** வாருணம் பிரத்தியக்கு மதுவே.

[illegible] மேற்கின் பெயர் — வாருணம், பிரத்தியக்கு. (உ) ஆக (ரு)

### வடக்கின் பெயர்.

**17.** உதக்கே யுதீசி யுத்தரம் பிங்கலம்
வடக்கின் பெயரே மதிதிசையு மாகும்.

வடக்கின் பெயர் — உதக்கு, உதீசி, உத்தரம், பிங்கலம், மதிதிசை. (ரு)

திசைநாற்கோணத்தின் பெயர்.

18. அந்தரா ளந்திசை நாற்கோண மாகும்.

திசைநாற்கோணத்தின் பெயர் — அந்தராளம். (க)

எண்டிசைப்பாலர் பெயர்.

19. இந்திர னக்கினி யியம னிருதி
வருணன் வாயு குபேர னீசான
னென் றிரு மெண்டிசைப் பாலர் பெயரே.

எண்டிசைப்பாலர் பெயர் — இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் (அ)

எண்டிசையானைப் பெயர்.

20 ஐராவதம் புண்டரீகம் வாமனங் குமுத
மஞ்சனம் புட்பதந்தஞ் சார்வ பூமஞ்
சுப்பிரதீப மெண்டிசை யானைப் பெயரே.

எண்டிசையானைப் பெயர் — ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம் (அ)

அட்டமாநாகப் பெயர்.

21. அனந்தன் வாசுகி தக்கன் கார்க்கோடகன்
பதுமன் மகாபதுமன் சங்க பாலன்
குளிக னட்டமா நாகப் பெயரே

அட்டமாநாகப் பெயர்:— அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் (அ)

எண்டிசையோனிப் பெயர்.

22 கொடிபுகை சிங்கநா யிடபங் கழுதை
யானை காகமிவை யெண்டிசை யோனி.

எண்டிசையோனிப் பெயர்.— கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை, யானை, காகம். (அ)

காற்றின் பெயர்.

23. அநிலம் வங்[illegible]பவ மானன
சமீரணன் மருத்துச் சதாகதி சலனன்
வாடை வளியே மாருதம் வாயு
கோதை வாதங் கூதை வேற்றலங்
காலொலி பவன முயிர்கந்த வாகன்
பிரபஞ்சனமா பலனே பரிசன

ஞசுகன் கந்தவக னூதை காலிலி
விண்டு நீனை வந்து வுலவை
கொண்டல கோடை யெனறிவை காற்றே.

காற்றின் பெயா:—அநிலம, வாகூழ், அரி, பவமானன், சமீர ணன், மருதது, சதாகதி, சலனன், வாடை, வளி, மாருதம, வாயு, கோதை, வாதம, கூதை, வேறறலம, கால், ஒலி, பவ னம, உயிா, கநதவாகன, பிரபஞ்சனன, மாபலன், பரிசனன, ஆசுகன, கநதவகன, ஊதை, காலிலி, விண்டு, நீனை, வநது, உலவை, கொண்டல, கோடை (கச)

இதுவுமது.

24 நீனு மாலு நிழலியு முயிரப்புங்
கூதிரு மெனறெ கூறற பாறறே.

வெடிகாற்றினபெயா·—நீல,மால நிழலி,உயிாபபு,கூதிா (ஐ)ஆ (கக)

பனிக்காற்றின் பெயா

25· கூதிரு மூதையுங் குளிாபனிக் காற்றே.

பனிககாற்றின் பெயா —கூதிா, ஊதை, குளிா (ட)

வடகாற்றின் பெயர்.

26· வாடை வடநதை வடகாற் றாகும்.

வடகாறறின் பெயா —வாடை, வடநதை. (உ)

மேல்காற்றின் பெயர்.

27· கோடை மேலகாறறே.

மேல்காற்றின் பெயா —கோடை. (க)

கீழ்காற்றின் பெயர்.

28· கொண்டல் கீழ்காறறே.

கீழ்காறறின் பெயா —கொண்டல. (க)

தென்றலின் பெயர்.

29· மந்தா நிலமே மலயக் காலே
தென்கால வசந்தன றெனறிசைத் தென்றல்.

தென்றலின பெயா·—மந்தாநிலம, மலயககால், தென்கால், வசந் தன. (ச)

சுழல்காற்றின் பெயர்.

30· சூறை வளியே சுழனறெழு காறறே.

சுழல்காற்றின பெயா —சூறை, வளி. (உ)

இதுவுமது

31. சூறா வளிசா ரிகையுஞ் சொல்லும்.

சுழல்காற்றின் பெயர் — சூறாவளி, சாரிகை. (௨) ஆக (௪)

தசவாயுவின் வகைப்பெயர்.

32. பிராண னபான னுதானன் வியானன்
சமான னாகன் கூர்மன் கிருகரன்
தேவ தத்தனொடு தனஞ்சய னென்று
வாயு வீரைந் தாகு மிவைதாம்.

தசவாயுவின் வகைப்பெயர் — பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் (என்று - எண்ணிடைச்சொல்.) (௧௦)

பிராணனென்பது

33. இருதய மண்டலத் தியங்கும் பிராணன்.

பிராணனென்பது — இருதயத்தியங்குவது

அபானனென்பது.

34. உச்சத் தலத்திடை நிற்ப தபானன்.

அபானனென்பது — * உச்சத்தலத்தில் நிற்பது

உதானனென்பது.

35. நாபியி னின்றங் கோவாத் துதானன்.

உதானனென்பது — நாபியி னிலைபெற்று நிற்பது

வியானனென்பது

36. வியான னெங்குந் வியாபியா நிற்கும்.

வியானனென்பது — சரீரமுழுதும் வியாபித்து நிற்பது.

சமானனென்பது

37. கந்தரக் குழியிற் சந்திடைச் சமானன்.

சமானனென்பது — கந்தரக்குழியிற் சந்திடை நிற்பது.

நாகனென்பது.

38. முடக்கலு நீட்டலுங் கிளப்பது நாகன்.

நாகனென்பது — முடக்கலு நீட்டலுங் † கிளக்கலுஞ் செய்விப்பது.

---

* உச்சம் - உச்சி † கிளக்கல் - பேசுதல்.

### நறும்புகையின் பெயர்.

**52.** *நறைகுய் வெடியே நறும்புகை யாகும்.*

நறும்புகையின் பெயர்:—நறை, குய், வெடி. (௩)

### அக்கினிதேவன் பெயர்.

**53.** *சாத வேதா மைவா கனனே*
*தீபதி சித்திர பானு தனஞ்சயன்*
*றென்கீழ்த் திசையோன் றேயுவா யுசகன்*
*பாவக னக்கினிப் பண்ணவன் பெயரே.*

அக்கினிதேவன் பெயர்—சாதவேதா, மைவாகனன், தீபதி, சித்திர பானு, தனஞ்சயன், தென்கீழ்த்திசையோன், தேயு, வாயுசகன், பாவகன். (௯)

### அக்கினிதேவன் பாரியின் பெயர்.

**54.** *பாரி சுவாகா தேவி யாகும்.*

அக்கினிதேவன் பாரியின் பெயர்—சுவாகாதேவி. (௧)

### முத்தீயின் பெயர்.

**55.** *காருக பத்திய மாகவ னீயந்*
*தக்கணாக் கினிய மிக்கமுத் தீயே.*

முத்தீயின் பெயர்—காருகபத்தியம், ஆகவனீயம், தக்கணாக்கினியம். (௩)

### பஞ்சாக்கினியின் பெயர்.

**56.** *இராகம் வெகுளி காமஞ் சடமே*
*தீபனம் பஞ்சாக் கினியின் பெயரே.*

பஞ்சாக்கினியின் பெயர்—இராகம், வெகுளி, காமம், சடம், தீபனம். (௫)

### நீரின் பெயர்.

**57.** *ஆலமுஞ் சலமு மமுமு மறலும்*
*பாணியு மப்பு மயமு முதகமும்*
*வயமு மயமும் வாரியும் விகடியும்*
*புனலுஞ் சலிலமும் புவனமு மளகமுஞ்*
*சீவனமும் பானீயமுஞ் சிந்துமாங் குசமும்*
*வருணமு மப்பு மழையுங் கவந்தமுங்*
*கீலாலமு மேகமும் * மகிலமு மிதடியும்*

---

* "கனமுங் கடியும்" எனவும் பாடம்.

நீரமுந் தோயமும் வாரும் பதமுங்
காரு மாரியுங் கமலமும் பயசுங்
கபமுஞ் சம்பரமுங் கமும் புட்கரமுஞ்
சீதமும் வசியுங் கோவுங் காண்டமுங்
கனவிரதமுஞ் சீவனியமு மலரு
நாரமு மமுதமு நீரெனலாகும்.

நீரின் பெயர் — ஆலம், சலம், அம், அறல், பாணி, அப்பு, பயம், உதகம், வயம், அயம், வாரி, விடயம், புனல், சலிலம், புவனம், அசனம், சீவனம், பானீயம், சிந்து, ஆர், குசம், வருணம், அம்பு, மழை, கவந்தம், கீலாலம், மேகம், அகிலம், இரதி, நீரம், தோயம், வார், பதம், கார், மாரி, கமலம், பயசு, கபம், சம்பரம், கம், புட்கரம், சீதம், வசி, கோ, காண்டம், கனவிரதம், சீவனீயம், அலர், நாரம், அமுது. (௫௦)

மேகத்தின் பெயர்.

58. மாரியு மழையு மஞ்சு மாசுங்
காரும் புயலுங் கனமுங் கொண்டலும்
* வானுந் தாரா தரமு மையுஞ் சீதமுஞ்
சீவதமுஞ் செலுங் குயினுஞ் சீமூதமு
மெழிலியுங் கொண்மூவும் விலோவு முகிலும்
விண்ணுங் கந்தரமுஞ் சலதரமும் விசும்பு
மங்குலு மிலாவு மாலும் அம்புதமும்
விண்டுவு மென்றிவை மேகப் பெயரே.

மேகத்தின் பெயர் — மாரி, மழை, மஞ்சு, மாசு, கார், புயல், கனம், கொண்டல், வான், தாராதரம், மை, சீதம், சீவதம், செல், குயின், சீமூதம், எழிலி, கொண்மூ, விலோவு, முகில், விண், கந்தரம், சலதரம், விசும்பு, மங்குல், இலா, மால், அம்புதம், விண்டு. (௨௯)

இதுவுமது

59. முதிரம் பயோதரங் கதம்ப மெய்ப்பிரம்
அப்பிர மாபமு மப்பெயர்க் குரித்தே.

இதுவும் மேகத்தின் பெயர் — முதிரம், பயோதரம், கதம்பம், மெய்ப்பிரம், அப்பிரம், ஆபம். (௬) ஆக (௩௫)

இடியேற்றின் பெயர்.

60. † வெடியொலி யுருமே கோவிண் ணேறசனி
செலவிருளி யிடியேறு படங்கலு மாகும்.

---

* "வானும் நாதமும்" எனவும், † "இருள்சத கோடிசென் மடங்கலு மிடியே" எனவும் பாடம்.

இடியின் பெயர்.—வெடி, ஒலி, உரும், கோ, விண்ணேறு, அசனி, செல, இருளி, மடங்கல். (௯)

மின்னலின் பெயர்.

61. சம்பை வித்துரு சபலை தடிதகச்
சஞ்சலை கனருசி தடியொளி மின்னல்.

மின்னலின் பெயர்—சம்பை, வித்துரு, சபலை, தடிதகு, சஞ்சலை, கனருசி, தடி, ஒளி. (௮)

மழையின் பெயர்.

62. மாரி வானம் வருட மழையெனல்.

மழையின் பெயர்—மாரி, வானம், வருடம். (௩)

பெருமழையின் பெயர்.

63. ஆசாரம் பெருமழை யாகு மென்ப.

பெருமழையின் பெயர்—ஆசாரம். (௧)

விடாமழையின் பெயர்.

64. சோனையும் பனித்தலும் விடாது சொரிதல்.

விடாமழையின் பெயர்:—சோனை, பனித்தல். (௨)

தலைப்பெயல்மழையின் பெயர்.

65. துளியுறை யாலி தலையல தலைப்பெயல்.

தலைப்பெயல்மழையின் பெயர்:—துளி, உறை, ஆலி, தலையல். (௪)

இதுவுமது.

66. * தலைப்பெயல் சோதகமும்.

ஷை தலைப்பெயல்மழையின் பெயர்:—சோதகம். (௧)

ஆலாங்கட்டியின் பெயர்.

67. ஆலி கரோபல மாலாங் கட்டி.

ஆலாங்கட்டியின் பெயர்—ஆலி, கரோபலம். (௨)

இதுவுமது.

68. காரகமு மாகு மெனமனர் புலவர்.

ஷை ஆலாங்கட்டியின் பெயர்:—காரகம் (௧) ஆக (௩)

* "துளியின் பெயரே சோதக மாகும்." எனவும் பாடம்.

### மழைத்துவலையின் பெயர்.

**69.** சிதரம் பிதிரே சீகரஞ் சிதரே
தூவல் துமிதந் திவலை யும்மழைத்
துவலையின் பெயரெனச் சொல்ல லாகும்.

மழைத்துவலையின் பெயர்—சிதரம், பிதிர், சீகரம், சிதர், தூவல், துமிதம், திவலை (எ)

### மழைவிடலின் பெயர்.

**70.** தூறலுந் தலையலுஞ் சோதகமு மழைவிடல.

மழைவிடலின் பெயர்—தூறல், தலையல், சோதகம் (ந)

### ஏழு மேகவகைப் பெயர்.

**71.** சம்வர்த்த மாவர்த்தம புட்கலா வர்த்தஞ்
சங்கா ரிதத்ந் துரோணங் காள முகி
நீல வருண மேழ் மேகப் பெயரே.

ஏழுமேகவகைப் பெயர்—சம்வர்த்தம, ஆவர்த்தம், புட்கலாவர்த்தம, சங்காரித்தம, துரோணம, காளமுகி, நீலவருணம (எ)

### ஏழு மழைவகைப் பெயர்

**72.** மணிநீர் பொன்பூ மண்கற றீயென்
றெழுவகை மேகம பொழிமாரி யேழே.

ஏழுமழைவகைப் பெயர்—மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ. (எ)

### வருணன் பெயர்.

**73.** சலபதி பாச தரனதி கேளவன்
வருபுனற செலவன் வருணன பெயரே.

வருணன் பெயர்—சலபதி, பாசதரன், நதிகேள்வன், புனற்செலவன் (ச)

### வெள்ளத்தின் பெயர்.

**74.** பிரளய நீத்தம் வாரி வெள்ளம்.

வெள்ளத்தின் பெயர்.—பிரளயம, நீத்தம், வாரி. (௩)

### இதுவுமது

**75.** ஓதமும் பெருக்கு மாகலு முரித்தே.

ஷை வெள்ளத்தின் பெயர்—ஓதம், பெருக்கு. (உ) ஆக (ரு)

பனியின் பெயர்.

**76.** இமமுந் துகினமு மஞ்சு நீகாரமும்
பனியின் பெயரே மந்தமும் பகரும்.

பனியின் பெயர்—இமம், துகினம், மஞ்சு, நீகாரம், ஏமந்தம். (ரு)

நிறைபுனலின் பெயர்.

**77.** வழாறும் பிராறும் வாரியு நிறைபுனல்.

நிறைபுனலின் பெயர்:—வழாறு, பிராறு, வாரி (௩)

நீந்துபுனலின் பெயர்.

**78.** அகாதமென்பது நீந்து புனலே.

நீந்துபுனலின் பெயர்—அகாதம் (௧)

தெளிந்தநீரின் பெயர்

**79.** சறசலமென்பது தெளிந்த நீரே.

தெளிந்தநீரின் பெயர்—சறசலம் (௧)

கலங்கனீரின் பெயர்.

**80** ஆவிலங் கலுழி யுடம்பை கலங்குறுபுனல்.

கலங்கனீரின் பெயர்—ஆவிலம், கலுழி, உடம்பை (௩)

நீரோட்டத்தின் பெயர்.

**81.** கோலமென்பது கொடுநீரோட்டம்.

நீரோட்டத்தின் பெயர்—கோலம். (௧)

நீர்த்திரையின் பெயர்.

**82.** அறலுந் தரங்கமு மலையுங் கலோலமும்
புனலின் றிரைக்குப் பொதுப்பெயராகும்.

நீர்த்திரையின் பெயர்.—அறல், தரங்கம், அலை, கலோலம் (௪)

இதுவுமது.

**83** சிகரமென்பதுந் திரையின் பொதுவே.

ஷை நீர்த்திரையின் பெயர்.—சிகரம் (௧) ஆ (ரு)

நீர்க்குமிழியின் பெயர்.

**84.** கொப்புண் மொக்குள் புற்புதங் குமிழி.

நீர்க்குமிழியின் பெயர்.—கொப்புள், மொக்குள், புற்புதம். (௩)

ஆழ்நீரின் பெயர்.

**85.** அழுந்துங் குண்டுங் கயமு மாழ்நீர்.

ஆழ்நீரின் பெயர்—அழுந்து, குண்டு, கயம். (௧)

நீர்ச்சுழியின் பெயர்

**86.** உங்கியுஞ் சுரியலு நீர்ச்சுழி யாகும்.

நீர்ச்சுழியின் பெயர்—உங்கி, சுரியல் (௨)

நுரையின் பெயர்.

**87.** பேனமும் பேயு நுரையின் பெயரே.

நுரையின் பெயர்—பேனம், பே (௩)

பரிவேடத்தின் பெயர்

**88.** ஊர்கோள் வட்ட மொளிகொள் மண்டிலம்
பரிதி விசயம் பரிவேட மாகும்.

பரிவேடத்தின் பெயர்—ஊர்கோள், வட்டம், மண்டலம், பரிதி,
விசயம் (௪)

இந்திரவில்லின் பெயர்.

**89.** வானவில் லிந்திர வில்லின் பெயரே.

இந்திரவில்லின் பெயர்—வானவில் (௫)

காமகாண்டத்தின் பெயர்.

**90** இரட்டைவில் காம காண்ட மாகும்

காமகாண்டத்தின் பெயர்—இரட்டைவில் (௬)

இருளின் பெயர்.

**91.** அல்லுந் திமிரமுங் கங்குலுங் கருவரி
கச்சள மந்த காரந் துவாந்த
நத்தந் தமமொடு துணங்கறு லிருளே.

இருளின் பெயர்—அல், திமிரம், கங்குல், கருவரி, கச்சளம், அந்த
காரம், துவாந்தம், நத்தம், தமம், துணங்கறல் (௧௦)

பதினெண்கணத்தின் பெயர்.

**92.** அமரர் சித்த ரசுரர் தைத்தியர்
கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர்
காந்தருவ ரியக்கர் விஞ்சையர் பூதர்
பசாச ரந்தரர் முனிவ ருரக

தேவ தேவன் றிரிபு ராந்தகன்
மானிட மேந்தி பேயோ டாடி
முத்தன் முதல்வன் சுத்தன் யோகி
வேத முதல்வ னரி பாக
னாலமர் கடவுள் பவனே யநாதி
நீல கண்ட னிருத்தன் பூதேசன்
கங்கா தரன் மழுவாளி கபாலி
யங்கணன் கைலை யாளி கங்காள
னங்கர வாரத்தோன் கழலாடி தற்பர
னித்த னிமல னீறணி கடவுள்
யானை யுரித்தோ னமல னனந்தன்
வாம தேவன் மகேச்சுரன் சதாசிவன்
திரியம்பகன் விமலன் சந்திர சேகரன்
மாலயற் கரியோ னாதனெண் டோளன்
ஞான மூர்த்தி நம்பன் பகவன்
வாமன் கிரீசன் வானு மாபதி
பூதபதி புண்ணியன் புலித்தோ லுடையோன்
மாதேவன் கொன்றை மாலையன் பித்த
னீசுர னாச மிலோ னிறைவன்
பாசுபதன் குன்ற வில்லி பாண்டரங்க
னீசன் பரமனு மெம்பிரான் பெயரே.

**சிவன் பெயர்** — அரன், அரூபி, அனந்தன், உருத்திரன், பரன், கறைமிடற்றோன், பார்ப்பதிக்கொழுநன், காலகாலன், பசுபதி, கண்ணுதல், தாணு, எண்குணன், சங்கரன், நந்தி, ஆதி, சசிதரன், ஐம்முகன், பினாகி, சோதி, சம்பு, சூலி, பிஞ்ஞகன், முக்கண்ணன், விடையோன், முன்னவன், பிறப்பிலி, நக்கன், சடையோன், நாயகன், சயம்பு, காமநாசன், பிதா, கருணாலயன், தேவதேவன், திரிபுராந்தகன், மானிடமேந்தி, பேயோடாடி, முத்தன், முதல்வன், சுத்தன், யோகி, வேதமுதல்வன், நாரிபாகன், ஆலமர்கடவுள், பவன், அநாதி, நீலகண்டன், நிருத்தன், பூதேசன், கங்காதரன், மழுவாளி, கபாலி, அங்கணன், கைலையாளி, கங்காளன், அங்கரவாரத்தோன், கழலாடி, தற்பரன், நித்தன், நிமலன், நீறணிகடவுள், யானையுரித்தோன், அமலன், அனந்தன், வாமதேவன், மகேச்சுரன், சதாசிவன், திரியம்பகன், விமலன், சந்திரசேகரன், மாலயற்கரியோன், நாதன், எண்டோளன், ஞானமூர்த்தி, நம்பன், பகவன், வாமன், கிரீசன், வரன், உமாபதி, பூதபதி, புண்ணியன், புலித்தோலுடையோன், மாதேவன், கொன்றைமாலையன், பித்தன், ஈச்சுரன், நாசமிலலோன், இறைவன், பாசுபதன், குன்றவில்லி, பாண்டரங்கன், ஈசன், பரமன், பிரான். (கூ)

இதுவுமது.

3. அந்தி வண்ணன் காமாரி புராரி
யந்தகா ரிபர்க்கனென் றனந்தமீ சன்பெயர்.

இதுவுமது சிவன் பெயர்—அந்திவண்ணன், காமாரி, புராரி, அந்தகாரி, பர்க்கன். (ரு) ஆக (௪௦௦)

சிவனூர்திகோடியின் பெயர்.

4. ஊர்தியுங் கொடியு மிடபமென் றுரைப்பர்.

சிவனூர்திகொடிவகைப் பெயர்—இடபம் (௧)

சிவன் படையின் பெயர்.

5. பாசஞ் சூலமும் பினாகவில லும்படை.

சிவன் படையின் பெயர்—பாச, சூலம், பினாகவில (௩)

சிவனெண்குணத்தின் பெயர்.

6. பவமின்மை யிறவின்மை பற்றின்மை பெயரின்மை
உவமை யின்மை யொருவினை யின்மை
குறைவிலறி வுடைமை கோத்திர மின்மையென்
றிறைவ னிடத்தி லெண்குண மிவையே.

சிவனெண்குணத்தின் பெயர்—பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை (அ)

சிவனைம்முகத்தின் பெயர்.

7. ஈசானந் தற்புருட மகோரம் வாமஞ்
சத்தியோ சாதனு சங்கர னைம்முகம்.

சிவனைம்முகத்தின் பெயர்—ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம். (ரு)

சிவனிருப்பு முதலியவகைப் பெயர்.

8. இருப்பது கைலை தரிப்பது கங்கை
முடிப்பது கொன்றை யுடுப்பது சருமம்.

சிவனிருப்பு முதலியவகைப் பெயர்.—இருப்பது கைலை, தரிப்பது கங்கை, முடிப்பது கொன்றை, உடுப்பது சருமம்.

சிவபதநான்கின் பெயர்.

9. தானே யுலகிருத் தறன்பா டிருத்தல்
தானு மதம்பெற றுனு குதலென
நாலே சிவன்ற னலலருட பதமே.

சிவபதநான்கின் பெயர் — * தானுலகிருத்தல், தன்பாடிருத்தல், தானுருப்பெறல், தானாகுதல் (௪)

### சிவபூஜையியல்பின் பெயர்.

10 சரியை கிரியை யோக ஞானமென
றிவையொரு நான்குஞ் சிவபூசை யியல்பே.

சிவபூசையியல்பின் பெயர் — சரியை, கிரியை, யோகம், ஞானம் (௪)

### சிவாகமநூற்பயன் பெயர்.

11. தருமார்த்த காம மோக்கஞ் சிவாகமம்.

சிவாகமநூற்பயன் பெயர் — தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் (௪)

### நந்தியின் பெயர்.

12. எருது விடையே றிடபம் புங்கவ
மிறைவா கனஞ்சிவ கணமுத னந்தி

நந்தியின் பெயர் — எருது, விடை, ஏறு, இடபம், புங்கவம், இறைவாகனம், சிவகணமுதல். (௭)

### சிவனழித்த முப்பரத்தின் பெயர்

13 பொன்னினும் வெள்ளியி னும்பு மிரும்பினு
மன்னு மும்மதில்சிவ னழித்தமுப் புரமே

சிவனழித்தமுப்புரத்தின் பெயர் — பொன்மதில், வெள்ளிமதில், இருப்புமதில் (௩)

### உமையின் பெயர்.

14. ஆரியை காமக் கோட்டி யம்பிகை
நாரி சத்தி நாயகி கௌரி
தேவி சாம்பவி தருமச் செல்வி
மலைமகள் சங்கரி மாதா வையை
பரையே யுருத்திரை பார்ப்பதி யந்தரி
நீலி கன்னி நிமலி குமரி
வேத முதல்வி விமலை முக்கண்ணி
யாமளை யபிராம வதியபி ராணி
சம்பு முதல்வி தற்பரை மனோன்மணி
சிவையுமை யம்மை திருநாம மெனப.

உமையின் பெயர் — ஆரியை, காமகோட்டி, அம்பிகை, நாரி, சத்தி, நாயகி, கௌரி, தேவி, சாம்பவி, தருமசெல்வி, மலைமகள்,

---

* இவற்றைச் சாலோக முதலிய முத்திகளாகக் கொள்க.

ணன், பூரணைகேள்வன், புட்கலைமணாளன், ஆரியன், அறத்தைக்காப்போன், யோகி, அரிகரபுத்திரன். (௧௩)

ஐயனார் ஊர்தி, கொடியின் பெயர்.

26 நாரி யூர்தி காரிக் குதிரை
கோழிக் கொடியு மாகு மென்ப.

ஐயனார் ஊர்தி - காரிக்குதிரை; ஐயனார் கொடி - கோழிக்கொடி.

மாகாளியின் பெயர்.

27. குமரி சண்டிகை குண்டலி நீலி
வலவை பைரவி கௌமாரி மாதரி
மாலை வீரி மதங்கி யாமளை
சூரி வேதாளி கங்காளி யோகினி
சூலி சாமுண்டி தாரகாரி
யாரியை தேவி வலவணங் கையை
யலகைக் கொடியாள் மாலினி முக்கண்ணி
பதுமையெண் டோளி பத்திரி யாரணி
யாளி யூர்திமா காளி பெயரே.

மாகாளியின் பெயர் — குமரி, சண்டிகை, குண்டலி, நீலி, வலவை, பைரவி, கௌமாரி, மாதரி, மாலை, வீரி, மதங்கி, யாமளை, சூரி, வேதாளி, கங்காளி, யோகினி சூலி, சாமுண்டி, தாரகாரி, ஆரியை, தேவி, வலவணங்கு, ஐயை, அலகைக்கொடியாள், மாலினி, முக்கண்ணி, பதுமை, எண்டோளி, பத்திரி, ஆரணி, யாளியூர்தி (௩௧)

மாகாளி ஊர்தி, கொடி, படையின் பெயர்.

28 ஊர்தி சிங்க முயர்கொடி யலகை
சூலம் படையெனச் சொலப் படுமே.

மாகாளியின் ஊர்தி - சிங்கம்; மாகாளியின் கொடி - அலகை; மாகாளியின் படை - சூலம் (௩)

இடாகினியின் பெயர்.

29. வஞ்சனி மாயவள் வலவை யிடாகினி.

இடாகினியின் பெயர் — வஞ்சனி, மாயவள், வலவை (௩)

யோகினியின் பெயர்.

30. சங்கினி சூர்மகள் யோகினி பெயரே.

யோகினியின் பெயர் — சங்கினி, சூர்மகள். (௨)

### யோகினியின் கொடி, ஊர்தியின் பெயர்.

**31.** பேய்க்கொடி வாகன மோரி யாகும்.

யோகினியின் கொடி - பேய்; யோகினியின் ஊர்தி - ஓரி (உ)

### துர்க்கையின் பெயர்.

**32.** அந்தரி மகிடற் காய்ந்தா ளையை
விந்தையம் பணத்தி விசயையெண் டோளி
மாலுகக் கிளையாள் பகவதி சயமகள
பாலைக் கிழத்தி வீரசெல்வி
கௌரிகாத் தியாயனி சக்க ராயுதி
யமரி குமரி யருங்கலை யூர்தி
சமரி கன்னி சயைவாட் படையாள்
சூலி யாரியை நீலி சண்டிகை
வெற்றி மேதித் தலைமிசை நின்றாள்
கொற்றவை நாரா யணிதுர்க் கைபெயரே.

துர்க்கையின் பெயர்:—அந்தரி, மகிடற்காய்ந்தாள், ஐயை, விந்தை, அமபணத்தி, விசயை, எண்டோளி, மாலுகக்கிளையாள், பகவதி, சயமகள, பாலைக்கிழத்தி, வீரசெல்வி, கௌரி, காத்தியாயனி, சக்கராயுதி, அமரி, குமரி கலையூர்தி, சமரி, கன்னி, சயை, வாட்படையாள, சூலி, ஆரியை, நீலி, சண்டிகை, மேதித்தலைமிசைநின்றாள, கொற்றவை, நாராயணி. (உக)

### துர்க்கையின் படை, ஊர்தியின் பெயர்.

**33.** கைவாள் படைவா கனங்கலை யாகும.

துர்க்கையின் படை-கைவாள்; துர்க்கையின் ஊர்தி - கலை. (உ)

### காடுகாள் பெயர்.

**34.** காடுகாண் மோடி காரிதாய் கொற்றி
மாரி சூரி வடுகிமூ தணங்கே.

காடுகாள் பெயர்— மோடி, காரிதாய், கொற்றி, மாரி, சூரி, வடுகி, மூதணங்கு. (ரு)

### சத்தமாதர்கள் பெயர்.

**35.** பிரமாணி நாரா யணிமா யேசுரி
கௌமாரி வாராகி யுருத்தி ராணி
யிந்தி ராணியென றெழுவகை மாதர்.

சத்தமாதர்கள் பெயர்:—பிராமணி, நாராயணி, மாயேசுரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி. (எ)

சத்தமாதர்கள் ஊர்தியின் பெயர்

36. அன்ன மேறு விடையே யலகை
மருளை களிறு கலுழனு மூர்தி.

சத்தமாதர்கள் ஊர்தியின் பெயர் — பிரமாணிக்கு அன்னம், வாராகிக்கு ஏறு, மாயேசுரிக்கு விடை, உருத்திராணிக்கு அலகை, கௌமாரிக்கு மருளை, இந்திராணிக்குக் களிறு, நாராயணிக்குக் கலுழன். (எ)

சத்தமாதர்கள் படையின் பெயர்

37. மறைதண்டு சூலம் பிறைகம் வேலம்
வச்சிர மாழி யன்படை யாகும்.

சத்தமாதர்கள் படையின் பெயர் — பிரமாணிக்கு வேதம், வாராகிக்குத் தண்டு, உருத்திராணிக்குச் சூலம், மாயேசுரிக்குப் பிறைகம், கௌமாரிக்கு வேல், இந்திராணிக்கு வச்சிராயுதம், நாராயணிக்குச் சக்கரம். (அ)

விட்டுணுவின் பெயர்

38. மாதவ னெடியோன் மாயவன் சநார்த்தனன்
சீதரன் பதுமநாபன் றிருமால்
கொண்டல் வண்ணன் கோவிந்தன் முகுந்தன்
விண்டுவன் மாலி வாமன் வாமனன்
திரிவிக் கிரமன் றிருமறு மார்பன்
கேசவன் வரதன் முராரி யனந்தன்
காவற் கடவுள் காகுத்த னச்சுத
னரவணைச் செல்வ னறிதுயி லமர்ந்தோன்
சக்கரா யுதனே சாரங்க பாணி
தண்கடல் வண்ணன் சலச விலோசன
னுலகினை யளந்தோ னுலக முண்டோன்
படிமுழு திடந்தோ னலகைமுலை யுண்டோன்
ஞேயா தானே சௌரிமது சூதன
னாதி பீதாம பரனே வராகன்
திருமகள் பூமி கொழுநன் கண்ண
னுவண வூர்தி யுவண முயர்த்தோன்
பஞ்சா யுதன்பரந் தாமன் பகவன்
பூவை வண்ணன் புணரியிற் றுயின்றோன்
பிரமன் றந்தை பின்னை கேள்வன்
சங்க மேந்தி நார சிங்க
னிருடீ கேசன் றசவவ தாரனே

### விட்டுணுவின் தனுவின் பெயர்.

**43.** *தனுவே சார்ங்கம்.*

*விட்டுணுவின் தனுவின் பெயர்:—சார்ங்கம்* (௧)

### விட்டுணுவின் வாளின் பெயர்.

**44.** *சயவா ணந்தகம்.*

*விட்டுணுவின் வாளின் பெயர்—நந்தகம்* (௧)

### விட்டுணுவின் தண்டின் பெயர்.

**45.** *தண்டுகௌ மோதகி.*

*விட்டுணுவின் தண்டின் பெயர்—கௌமோதகி* (௧)

### விட்டுணுவின் சங்கின் பெயர்.

**46.** *சங்கு பாஞ்ச சன்னிய மாகும்.*

*விட்டுணுவின் சங்கின் பெயர்—பாஞ்சசன்னியம்* (௧)

### அரியின் தசாவதாரத்தின் பெயர்.

**47.** *மச்சங் கூர்மம் வராக நரசிங்கம்*
*வாமனம் பரசு ராம னிராமன*
*பலபத திரனே கண்ணனவரு கற்கியென்*
*றிவைபோரு பத்து மரியவ தாரம்.*

*அரியின் தசாவதாரத்தின் பெயர்—மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி.* (௰)

### ஷடி மூவைந்தவதாரத்தின் பெயர்.

**48.** *சனகன் சனந்தனன் சனுதன் சனற்குமார*
*னாராயணன கபில னிடப*
*னாரத னயக்கிரீவன தத்தாத் திரேயன்*
*மோகினி வேள்வியின பதியே வியாதன்*
*றன்வந் திரியே பௌத்த னென்றாங்*
*கினைமூ வைந்து மரியவ தாரம்.*

*ஷடி மூவைந்தவதாரத்தின் பெயர்—சனகன், சனந்தனன், சனுதன், சனற்குமாரன், நாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்.* (௧௫)

பலராமனொழிய மற்ற மூர்த்தங்களின் பெயர்.

49. வெற்றிக் கலப்பைப் படையோ னொழியப்
புத்த னென்று புகலப் படுமே.

பலராமனொழிய மற்ற மூர்த்தங்களின் பெயர்:—புத்தன். (க)

திருமகளின் பெயர்.

50. பொருளின் செல்வி பொறியரிப் பிரியை
மலாமக ளிந்திரை மாவே யிலக்குமி
கமலை யாக்கம் பதுமை சீதேவி
தாக்கணங் கிளையா டலைகடற் பிறந்தாள்
மாறிரு மார்பினள் மாமறைத் தலைவி
செய்யாள் பூமக டிருமகள் பெயரே.

திருமகளின் பெயர்—பொருளின்செல்வி, பொறி, அரிப்பிரியை, மலாமகள், இந்திரை, மா, இலக்குமி, கமலை, ஆக்கம், பதுமை, சிதேவி, தாக்கணங்கு, இளையாள், கடற்பிறந்தாள், மாறிருமார்பினள், மறைத்தலைவி, செய்யாள், பூமகள் (கஅ)

பலபத்திரன் பெயர்.

51. இரேவதி கொழுநன் குண்டல னுரோகணி
தநயன் னீலாம் பரனலா யுத
னச்சுதன் முன்னோன் காம பால
னநந்தன் வெள்ளை காளிந்தி மாத்தனன்
பனந்துசன் முசலி கருந்துகி லுடையன்
பலதே வன்பல பத்திரன் பெயரே.

பலபத்திரன் பெயர்—இரேவதிகொழுநன், குண்டலன், உரோகணிதநயன், நீலாம்பரன், அலாயுதன், அச்சுதன்முன்னோன், காமபாலன், அநந்தன், வெள்ளை, காளிந்திமாத்தனன், பனந்துசன், முசலி, கருந்துகிலுடையன், பலதேவன் (கச)

பலபத்திரன் படை, கொடியின் பெயர்.

52. படையே கலப்பை கொடிபனை யாகும்.

பலபத்திரன் படை - கலப்பை; பலபத்திரன் கொடி - பனை (உ)

காமன் பெயர்.

53 மான்மகன் மதனன் மகரக் கொடியோன்
வேனி லாளி வில்வேள் வசந்த
னங்கச னனங்க னைங்கணைக் கிழவன்

திங்கட் குடையோன் றென்றற் றேரோன்
வசந்தன் வில்லி மோகன் மாமலர்க் கணையோன்
மதிசக னிரதி காந்தன் மாரன்
மனோபவன் மனோசன் மனோபு மன்மதன்
திருமகன் மைந்தன் சமபரா ரூதன்
உருவிலி கடன்முர சோன்கைச் சுரிகையன்
காந்தாப்பன் சித்தசன் பூவாளி பூமன்
கருப்பு வில்லி காமன் பெயரே.

காமன் பெயர் — மாலமகன், மதனன், மகரக்கொடியோன், வேனிலாளி, வேள், வசந்தன், அநங்கன், அங்கசன், ஐங்கணைக்கிழவன், திங்கட்குடையோன், தென்றற்றேரோன், வசந்தன், வில்லி, மோகன், மலர்க்கணையோன், மதிசகன், இரதிகாந்தன், மாரன், மனோபவன், மனோசன், மனோபு, மன்மதன், திருமகன் மைந்தன், சமபராரூதன், உருவிலி, கடன்முரசோன், கைக்சுரிகையன், காந்தாப்பன், சித்தசன், பூவாளி, பூமன், கருப்பு வில்லி (௫௩)

காமன் ஊர்தி, கொடியின் பெயர்.

54 வாகனந் தென்றன் மகரங் கொடியே.

காமன் ஊர்தி - தென்றல், காமன் கொடி - மகரம் (௧)

காமன் வில், கணையின் பெயர்

55. கழையே வில்லாங் கணைமல ரைந்தே.

காமன் வில் - கழை, காமன் கணை - ஐவகைமலர். (௨)

காமன் ஐங்கணையின் பெயர்.

56. வனசஞ் சூத மசோக முல்லை
குவளை காமன் கொழுமைங் கணையே.

காமன் ஐங்கணையின் பெயர் — தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை. (௩)

காமன் ஐங்கணையின் செயலின் பெயர்.

57. உன்மத்த மதன மோகனஞ் சந்தாபம்
வசீகர மாமிவை மதனகணைச் செயலே.

காமன் ஐங்கணையின் செயலின் பெயர் — பெருமயக்கு, சித்தாகுலம், புணர்ச்சிக்கிசைதல், மோகனம், சந்தாபம், வசீகரம். (௪)

பிரமன்பெயர்—அந்தணன், மலரோன், அயன், நான்முகத்தோன், உந்தியில்வந்தோன், ஓதிமவாகனன், பாரதிகொழுநன், படைப்போன், பகவன், ஆரணன், இரணியகருப்பன், விரிஞ்சன், வேதா, விதாதா, விதி, சதானந்தன், தாதா, பிதாமகன், சுயம்பு, மால்மகன், எண்கண்ணன், கமலயோனி, பிரசாபதி, வேதன், கமலன், இறை, ஆதன், பரமேட்டி, திசைமுகன், வானவர்முதல்வன், போதன், வரன், குரவன், மண்பொருந்தந்தை, அனாதன், ஞானன், அன்னமுயர்த்தோன், இறைவன், மறையோன் (௩௯)

பிரமன் ஊர்தி, படை, கொடியின் பெயர்.

65\. அன்ன மூர்தி யருப்படை பாசம்
மன்னிய தண்டப்படை கொடி மறை யாகும்.

பிரமன் ஊர்தி - அன்னம்; பிரமன் படை - பாசம், தண்டம், பிரமன் கொடி - மறை (௪)

நாமகளின் பெயர்.

66 பாரதி தையலாள் பனுவ லாட்டி
வேத முதல்வி பிராமி விமலை
வாணி வெள்ளை நிறத்தினள் வாக்கா
னான்முகக் கிழத்தி ஞானத் திறைவி
காயத் திரியே சாவித் திரியே
நற்பா மடந்தை நன்னா மடந்தை
யுலக மாதா நாமக ளிசைமகள்
கலைமகள் வெண்டா மரைமகள் கண்ணு
டொலைபா வெனனுயிர்த் துணைவி பெயரே.

நாமகள் பெயர்—பாரதி, தையலாள், பனுவலாட்டி, வேதமுதல்வி, பிராமி, விமலை, வாணி, வெள்ளைநிறத்தினள், வாக்கு, நான்முகன்கிழத்தி, ஞானத்தலைவி, காயத்திரி, சாவித்திரி, பாமடந்தை, நாமடந்தை, உலகமாதா, இசைமகள், கலைமகள், வெண்டாமரைமகள், கண்ணுள், உயிர்த்துணைவி (௨௧)

நாமகள் ஊர்தியின் பெயர்.

67 ஊர்தி பூர மாகு மென்ப.

நாமகள் ஊர்தியின் பெயர்:—பூரம் (௧)

இந்திரன் பெயர்.

68\. அமரா வதியோ னாயிரங் கண்ணன்
சதமகன் கோபதி போகிசங் கிரந்தனன்
பாக சாதனன் வச்சிரப் படையோன்

மேக வாகனன் விண்முழு தாளி
வாசவன் மகவான் வானவன் கௌசிக
னாகண் டலனயி ராவதன் வலாரி
புருகூதன் சக்கிரன் புரந்தரன் மருத்துவன்
மருத்துக் கிழவன் வரைசிற கரிந்தோ
னரிசசி வல்லவன் திருமலி சுவாகதன்
வெள்ளி நாயகன் புலவன் வேந்தன்
புரோகிதன் சுனாசி கரியவன் புனிதன்
காண்டா வனமால் வெள்ளை வாரணன்
தேவர் வேந்தன் பொன்னகர்ச் செல்வ
னைந்தரு நாத னிந்திரன் பெயரே

இந்திரன் பெயர் — அமராவதியோன், ஆயிரங்கண்ணன், சதமகன், கோபதி, போகி, சங்கிரந்தனன், பாகசாதனன், வச்சிரப்படையோன், மேகவாகனன், விண்முழுதாளி, வாசவன், மகவான், வானவன், கௌசிகன், ஆகண்டலன், அயிராவதன், வலாரி, புருகூதன், சக்கிரன், புரந்தரன், மருத்துவன், மருத்துக்கிழவன், வரைசிறகரிந்தோன், அரி, சசிவல்லவன், திருமலிசுவாகதன், வெள்ளிநாயகன், புலவன், வேந்தன், புரோகிதன், சுனாசி, கரியவன், புனிதன், காண்டாவனமால், வெள்ளைவாரணன், தேவர்வேந்தன், பொன்னகர்ச்செல்வன், ஐந்தருநாதன் (ருக)

இந்திரன் றேவி பெயர்.

69 சுந்தரி சசியயி ராணி புலோமசை
யைந்தருச் செல்வி யிந்திரன் றேவிபெயர்.

இந்திரன்றேவி பெயர் — சுந்தரி, சசி, அயிராணி, புலோமசை, ஐந்தருச்செல்வி (ரு)

இந்திரன் மகன் பெயர்

70. சயந்த னிந்திரன் றனமக னாகும்.

இந்திரன் மகன் பெயர் — சயந்தன் (க)

இந்திரன் நகரின் பெயர்.

71. அங்கவன் றிருநக ரமரா வதியே.

இந்திரன் நகரின் பெயர்:—அமராவதி. (க)

இந்திரன் யானையின் பெயர்.

72. ஓங்கிய வூர்தி வெள்ளையயி ராவதம்.

இந்திரன் யானையின் பெயர்:—அயிராவதம். (க)

### இந்திரன் அணிவதின் பெயர்.

**83.** அணிவது சிந்தா மணிசூ ளாமணி.

ந்திரன் அணிவதின் பெயர்:—சிந்தாமணி, சூளாமணி (௨)

### நாடகத்து அரம்பையர் பெயர்.

**84.** மேனகை யரம்பை யுருப்பசி திலோத்தமை
யான நால்வரு நாடகத் தரம்பையர்.

டகத்து அரம்பையர் பெயர்—மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமை. (௪)

### தேவர் பொதுப்பெயர்.

**85.** வானவ ரமுதர் வரர்புத் தேளிர்
மேலவ ரிமையவர் விண்ணவர் கடவுள
ரமரர் புங்கவ ரையரி லேகர்
விபுதர் தீர்த்த ரசுரர்க் கமித்திர
ருபாநிலை யோர்சுர ரும்பர் புலவ
ரண்டர் முதலவ ராதித்தர் சுவாகர்
பொன்னுல குடையோர் தேவர் பொதுப்பெயர்.

தவர் பொதுப்பெயர்—வானவர், அமுதர், வரர், புத்தேளிர், மேலவர், இமையவர், விண்ணவர், கடவுளர், அமரர், புங்கவர், ஐயர், இலேகர், விபுதர், தீர்த்தர், அசுரர்க்கமித்திரர், உபாநிலையோர், சுரர், உம்பர், புலவர், அண்டர், முதலவர், ஆதித்தர், சுவாகர், பொன்னுலகுடையோர். (௨௪)

### முப்பத்துமுத்தேவர் பெயர்.

**86.** ஆதித்தர் பன்னிருவ ரச்சுவினிக ளிருவ
ரீசர் பதினொருவ ரெண்மர் வசுக்க
ளாக முப்பத்து மூவர்தம் பெயரே

ப்பத்துமூத்தேவர் பெயர்—ஆதித்தர் பன்னிருவர்; அச்சுவினிகள் இருவர், ஈசர் பதினொருவர், வசுக்கள் எண்மர். (௩௩)

### அவற்றுள், ஆதித்தர் பன்னிருவர் பெயர்.

**87.** வைகத்தன் விவச்சுதன் வாசன்மார்த் தாண்டன்
பாற்கர னிரவி யுலோகப் பிரகாச
னுலோக சாட்சி திரிவிக் கிரம
னாதித்தன் திவாகர னங்கிச மாலி
யாகச் சூரியர் பன்னிரண் டென்ப.

வற்றுள், ஆதித்தர் பன்னிருவர் பெயர்—வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப்பிரகா

சன், உலோகசாட்சி, திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி. (கஉ)

அச்சுவினிகள் இருவர் பெயர்.

88. அச்சுவினி தேவ ரிருவர்தம் பெயரே
யாக முப்பத்து மூவர்தம் பெயரே.

அச்சுவினிகள் இருவர் பெயர்—அச்சுவினிதேவர் (உ)

உருத்திரர் பதினொருவர் பெயர்.

89. மாதேவ னரனே யுருத்திரன் சங்கர
னீல லோகித னீசான னிசயன
வீம தேவன பவோற்பவன கபாலி
சௌமிய னேகா தசருத்திரர் பெயர்.

உருத்திரர் பதினொருவர் பெயர்—மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன். (கக)

அட்டவசுக்கள் பெயர்.

90. தரன் துருவன் சோமன் றாபஞ் சைவ
னனல னனிலன் பிரத்தி யூசன்
பிரபாச னட்ட வசுக்கள் பெயரே.

அட்டவசுக்கள் பெயர்—தரன், துருவன், சோமன், ஆபஞ்சைவன், அனலன், அனிலன், பிரத்தியூசன், பிரபாசன். (அ)

கடவுளர் பொதுப்பெயர்.

91. பண்ணவர் பகவர் தீர்த்தர் பட்டாரகர்
புங்கவ ரெனப்படுங் கடவுளர் பொதுப்பெயர்.

கடவுளர் பொதுப்பெயர்—பண்ணவர், பகவர், தீர்த்தர், பட்டாரகர், புங்கவர் (ரு)

தெய்வத்தின் பெயர்

92. சூரே யணங்கு கடவு டெய்வதந்
தேவுபுத் தேளியவு டெய்வ மாகும்.

தெய்வத்தின் பெயர்—சூர், அணங்கு, கடவுள், தெய்வதம், தே, புத்தேள், இயவுள். (எ)

சுரர்மகளிர் பெயர்.

93. அரமகளிர் சூரர் மகளி ரரம்பையர்
சுரர்மக ளிரெனச் சொல்லப் பெறுமே.

சுரர்மகளிர் பெயர்:—அரமகளிர், சூரரமகளிர், அரம்பையர். (அ)

### தெய்வப்பெண் பெயர்.

**94.** அணங்குசூர் வஞ்சனை மாயவள் கன்னி
யிணங்கிய தெய்வப் பெண்பெய ராகும்.

தெய்வப்பெண் பெயர்:— அணங்கு, சூர், வஞ்சனை, மாயவள், கன்னி. (௫)

### மூதேவியின் பெயர்.

**95.** கழுதை யூர்தி காக்கைக் கொடியாண்
முகடி தௌவை கலதிமூ தேவி.

மூதேவியின் பெயர்:—கழுதையூர்தி, காக்கைக்கொடியாள், முகடி, தௌவை, கலதி (௬)

### இதுவுமது.

**96.** சீர்கேடி கேட்டை கெடலணங் கேக
வேணி சேட்டை யென்ன விளம்புவர்.

௸ மூதேவியின் பெயர்.—சீர்கேடி, கேட்டை, கெடலணங்கு, ஏகவேணி, சேட்டை (௭)

### மூதேவி ஊர்தி, படை, கொடியின் பெயர்.

**97.** வாகனங் கழுதை வன்படை துடைப்பங்
காகங் கொடியெனக் கழறல் வேண்டுமே.

மூதேவி ஊர்தி - கழுதை; மூதேவி படை - துடைப்பம்; மூதேவி கொடி - காகம் (ட)

### தருமதேவதையின் பெயர்.

**98.** மரகத வல்லி பூக நிழலினள்
பரம சுந்தரி யியக்கி பகவதி
யருகனைத் தரித்தா ளறத்தின் செல்வி
தருமதே வதையம் பாலிகை பெயரே.

தருமதேவதையின் பெயர்:— மரகதவல்லி, பூகநிழலினள், பரமசுந்தரி, இயக்கி, பகவதி, அருகனைத்தரித்தாள், அறத்தின்செல்வி, அம்பாலிகை. (௮)

### அருகன் பெயர்.

**99.** புண்ணிய னெண்குணன் பொன்னெயி லாதன்
பண்ணவன் பட்டா ரகனே முனைவ
னசோகமர் கடவுள் பகவன் முக்குடையோ
னறவாழி வேந்த னரியணைச் செல்வன்

பூமிசை நடந்தோன் வரதன் சினேந்திர
னென பிறவு மருகன் பெயரே.

அருகன் பெயர்.—புண்ணியன், எண்குணன், பொன்னெயிலுறைந்தோன், பண்ணவன், பட்டாரகன், முனைவன், அசோகமாகடவுள், பகவன், முக்குடையோன், அறவாழிவேந்தன், அரியணைச்செல்வன், பூமிசைநடந்தோன், வரதன், சினேந்திரன். (௧௪)

### அருகன் ஊர்தி, படையின் பெயர்.

**100.** அருக னூர்தி யம்புயம் படையே

அருகன் ஊர்தி அம்புயம்; அருகன் படை—அம்புயம். (௧)

### அருகன் கொடியின் பெயர்.

**101.** நாட்டக் காட்சி ஞானஞ் சீலங் கொடி.

அருகன் கொடியின் பெயர்—காட்சி, ஞானம், சீலம். (௧)

### புத்தன் பெயர்.

**102** பார்மிசை நடந்தோன் பகவன் புங்கவன்
றருமன் சாந்தன் முனைவன் வாமன்
புனிதன் சினன்வர னறிவன் பிடகன்
போதி வேந்தன் புத்தன் பெயரே.

புத்தன் பெயர்—பார்மிசைநடந்தோன், பகவன், புங்கவன், தருமன், சாந்தன், முனைவன், வாமன், புனிதன், சினன், வரன், அறிவன், பிடகன், போதிவேந்தன் (௧௫)

### குபேரன் பெயர்.

**103.** இருநிதிக் கிழவ னியக்கர் வேந்தன்
வடதிசைத் தலைவ னரவா கனனே
யளகை யாளி நிதிதனச் செல்வன்
சிரகத் தாரோன் வைச்சிர வணனே
யரனுடைத் தோழன் கின்னரர் பிரானே
மரகதன் புட்பக வூர்தி பிங்கலன்
மந்திரி தனபதி குபேரன் றன்பெயர்.

குபேரன் பெயர்—இருநிதிக்கிழவன், இயக்கர்வேந்தன், வடதிசைத்தலைவன், நரவாகனன், அளகையாளி, நிதிதனச்செல்வன், சிரகத்தாரோன், வைச்சிரவணன், அரனுடைத்தோழன், கின்னரர்பிரான், மரகதன், புட்பகவூர்தி, பிங்கலன், மந்திரி, தனபதி. (௧௬)

குபேரன் வாகனத்தின் பெயர்.

**104.** நரவா கனமும் புட்பகத் தேரு
மவனவா கனமா மறியுங் காலே.

குபேரன் வாகனத்தின் பெயர் — நரவாகனம், புட்பகத்தேர். (௨)

இயமன் பெயர்

**105.** இயமனரி யந்தகன் றென்றிசைக் கிழவன்
சமனே சண்டன் சண்பன் றருமன்
நமனே மறலி தண்ட தரனே
சைமினி நகரோன் வைதரணி நதியோன்
செங்கோற் கடவு ளுசவ னடுவ
னிங்கிவை யமன்பெயர் கூற்று மிசைக்கும்.

இயமன் பெயர் — இயமன், அரி, அந்தகன், தென்றிசைக்கிழவன், சமன், சண்டன், சண்பன், தருமன், நமன், மறலி, தண்டதரன், சைமினிநகரோன், வைதரணிநதியோன், செங்கோற்கடவுள், காசவன், நடுவன், கூற்று. (௩)

இயமன் ஊர்தி, படையின் பெயர்.

**106.** எருமை யூர்தி யெறியும் பொரும்படை
தண்டு பாசந் தாறு குயமே

இயமன் ஊர்தி - எருமை; இயமன்படை - தண்டு, பாசம். (௪)

காலன் பெயர்.

**107.** சண்டன் மறலி கூற்றுச் சமனே
வந்த மடங்கல் காலமறலு மிசைக்கும்.

காலன் பெயர் — சண்டன், மறலி, கூற்று, சமன், மடங்கல், கால மறல. (௫)

காலன் படையின் பெயர்.

**108.** துணிக்கும் வெம்படை கணிச்சி யாகும்.

காலன் படையின் பெயர் — கணிச்சி (௬)

அசுரர் பெயர்.

**109.** தானவர் அவுணர் தயித்தியர் கண்டகர்
மேனி காயம்போர் தகுவர்கா ரவுணர்
தேவர் பகைவர் திதிபுதல் வசுரர்.

அசுரர் பெயர் — தானவர், அவுணர், தயித்தியர், கண்டகர், மேனிகாயம்போர், தகுவர், காரவுணர், தேவர்பகைவர், திதிபுதல்வர். (௭)

### மாவலியின் பெயர்.

**110.** *வயிரோ சனனே மாவலி யவுணன்.*

மாவலியின் பெயர் —வயிரோசனன் (க)

### நிருதர் பெயர்.

**111.** *நிசாசரர் சால கடங்கடர் நிருதர்.*

நிருதர் பெயர் —நிசாசரர், சாலகடங்கடர். (உ)

### அரக்கர் பெயர்.

**112.** *அரக்க ரிராக்கதர் யாது தானவர்*
*நிசாசரர் பிசிதா சனரென நிகழ்த்துப.*

அரக்கர் பெயர் —இராக்கதர், * யாதுதானவர், நிசாசரர், பிசிதாசனர். (௩)

### கந்தருவர் பெயர்.

**113.** *கந்தருவ ரியக்கர் யாழோர் காந்தருவர்*
*தந்திரர் கின்னர ரெனனச சாற்றுவர்*

கந்தருவர் பெயர் — இயக்கர், யாழோர், காந்தருவர், தந்திரர், கின்னரர் (௪)

### வித்தியாதரர் பெயர்.

**114.** *விஞ்சையர் கேசரர் வித்தியா தரர்பெயர்.*

வித்தியாதரர் பெயர் —விஞ்சையர், கேசரர் (௫)

### வித்தியாதரர் இடத்தின் பெயர்.

**115.** *சேணியும் விஞ்சைப்பதியுஞ் சேடியும்*
*யாணர் நகரும் வித்தியா தரரிடம்.*

வித்தியாதரர் இடத்தின் பெயர் —சேணி, விஞ்சைப்பதி, சேடி, யாணர்நகர். (௬)

### பூதத்தின் பெயர்.

**116.** *சாதகம் பாரிடங் குறள்கூளி சாரதம்*
*மகோதரம் கிருத்திமங் கணம்பூ தப்பெயர்.*

பூதத்தின் பெயர் —சாதகம், பாரிடம், குறள், கூளி, சாரதம், மகோதரம், கிருத்திமம், கணம். (௭)

---

* யாது தானவர் எனச் சொல்வகை செய்து இருபெயராகக் கொள்ளலும் ஒன்று.

### பேயின் பெயர்.

117 கடிவே தாளங் கழுது கூளி
வெறியே யலகை பிசாசு மண்ணை
மயலே சோகு மருளே வியந்தரம்
பிரேத மழனே குணங்கு குணபாசி
பாசமு சாவு சவமே யளளே
குணபமும் பிணமும் பேய்ப்பெயர் கூறும்.

பேயின் பெயர்:—கடி, வேதாளம், கழுது, கூளி, வெறி அலகை, பிசாசு, மண்ணை, மயல, சோகு, மருள, வியந்தரம், பிரேதம், அழன, குணங்கு, குணபாசி, பாசம, சாவு, சவம, அளளே, குணபம, பிணம (உஉ)

### சூரியன் பெயர்.

118. இரவி யினன்மணி யென்றாழ் செஞ்சுடர்
பரிதி தேரோ னெல்லோன் பானு
சண்ட னருக்கன் றபன னாதவ
னண்ட யோனி யாயிரங் கதிரோன்
கனலி திவாகரன் கனலோன் பாற்கர
னனலி யொளியோ னலரிமார்த் தாண்டன்
றினகரன் செங்கதி ரரிதிமி ராரி
யருணன் சூரன் ஞாயிறு சவிதா
பகலே பாககன் வெயிலோ னாதித்தன்
விரிசசிக னவிரோசனன் விகாத்தனன் மித்திரன்
வெய்யோன் கதிரோன் வெஞ்சுடர் சோதி
பகலவ னெல்லை பதங்க னாதப
னழலவ னுதய னிருள்வலி பொழுது
பகவன் சான்றோன் வேந்தன் றபநன்
றரணி யெல்லி சாயா பதியே
பகலோன் விண்மணி பனிப்பகை கதிரவன்
சுடரோன் மாலி சூரியன் பெயரே.

சூரியன் பெயர்:—இரவி, இனன், மணி, என்றாழ், செஞ்சுடர், பரிதி, தேரோன், எல்லோன், பானு, சண்டன, அருக்கன, தபனன், ஆதவன், அண்டயோனி, ஆயிரங்கதிரோன், கனலி, திவாகரன, கனலோன், பாற்கரன், அனலி, ஒளியோன், அலரி, மார்த்தாண்டன், தினகரன, செங்கதிர், அரி, திமிராரி, அருணன், சூரன, ஞாயிறு, சவிதா, பகல, பாகசன், வெயிலோன், ஆதித்தன, விரிசசிகன், விரோசனன, விகாத்தனன், மித்திரன், வெய்யோன, கதிரோன், வெஞ்சுடர், சோதி, பகலவன், எல்லை, பதங்கன், ஆதபன், அழலவன், உதயன், இருள்வலி,

பொழுது, பகலவன், சான்றோன், வேந்தன், தாபனன், தரணி, எல்லி, சாயாபதி, பகலோன், விண்மணி, பனிப்பகை, கதிரவன், சுடரோன், மாலி. (௬௪)

சூரியமண்டிலத்தின் பெயர்

**119.** விசய மென்பது வெங்கதிர் மண்டிலம்.

சூரியமண்டிலத்தின் பெயர்—விசயம். (௧)

சூரிய கிரணத்தின் பெயர்.

**120.** கரமே தீவிரங் கோகிரணங் கதிர்.

சூரிய கிரணத்தின் பெயர்—கரம், தீவிரம், கோ, கதிர் (௪)

வெயிலின் பெயர்

**121** கோடை யென்றா ழெல்லொளி வெயிலெனல்.

வெயிலின் பெயர்—கோடை, என்றூழ், எல், ஒளி. (௪)

இதுவுமது

**122** ஆதவ மென்பது மப்பெயராகக் குறித்தே.

இஃது வெயிலின் பெயர்—ஆதவம் (௧)

உதயத்தின் பெயர்.

**123.** விடியல் வைகறை புலரி யுதயம்.

உதயத்தின் பெயர்—விடியல், வைகறை, புலரி (௩)

கழிவுநாளின் பெயர்.

**124.** கழிவு நாளே காலை வைகல்.

கழிவுநாளின் பெயர்:—காலை, வைகல் (௨)

அந்தியின் பெயர்.

**125.** சந்தி மாலை சாய மென்றிவை
யந்தியின் பெயர்கோ தூளியு மாகும்.

அந்தியின் பெயர்—சந்தி, மாலை, சாயம், கோதூளி. (௪)

நடுப்பகலின் பெயர்.

**126.** மத்தி யானம் நண்பக னடுப்பகல்.

நடுப்பகலின் பெயர்.—மத்தியானம், நண்பகல். (௨)

இதுவுமது.

127. உச்சியு முருமமு மப்பெயர்க் குரித்தே.
நடுப்பகலின் பெயர்—உச்சி, உருமம். (௨)

சாமத்தின் பெயர்.

128. யாம மென்பது சாம மாகும்.
சாமத்தின் பெயர்:—யாமம் (௧)

பகலின் பெயர்.

129. எல்லுந் திவசந் தினந்திவா வும்பகல்.
பகலின் பெயர்—எல், திவசம், தினம், திவா. (௪)

அருக்கன் ஊர்தியின் பெயர்

130. தனிக்கா றொற்றைத்தேர் பொற்றே ரருக்க னூர்தி.
அருக்கன் ஊர்தியின் பெயர்—ஒற்றையாழித்தேர், பொற்றேர் (௨)

அருக்கன் தேர்ப்புரவியின் பெயர்.

131. ஓரேழ் புரவி யுடையன வதற்கே.
அருக்கன் தேர்ப்புரவியின் பெயர்—ஏழ்புரவி. (௧)

அருக்கன் தேர்ப்பாகன் பெயர்.

132. ஆதித்தன் பாக னருண னாகும்.
அருக்கன் தேர்ப்பாகன் பெயர்—அருணன். (௧)

சந்திரன் பெயர்.

133. இந்து சசியிம கிரணன் றண்சுட
ருடுபதி தாரா பதியே யமபுலி
யமுத கதிரோன் சீதன் குரங்கி
விதுநில வல்லோன் வேந்தன் றண்ணவன்
கலையோன் மதியே களங்கன் குபேர
னாலோன் பனிக்கதிர் குமுத சகாய
னலவன் கலாநிதி நிசாகர னிசாபதி
யிரவோ னிராக்கதிர் தானவன் சுதாகர
னுடுவேந்தன் பிறைமுப் பறகூடு பசுங்கதிர்
சந்திரன் றிங்கள் சோமன் றனபெயர்.

சந்திரன் பெயர்—இந்து, சசி, இமகிரணன், தண்சுடர், உடுபதி, தாராபதி, அமபுலி, அமுதகதிரோன், சீதன், குரங்கி, விது,

நிலவு, அல்லோன், வேந்தன், தண்ணவன், கலையோன், மதி, களங்கன், குபேரன், ஆலோன், பனிக்கதிர், குமுதசகாயன், அலவன், கலாநிதி, நிசாகரன், நிசாபதி, இராவோன், இராக்கதிர், சாணவன், சுதாகரன், உடுவேந்தன், பிறை, முயற்கூடு, பசுங்கதிர், திங்கள், சோமன். (௩௬)

நிலவின் பெயர்.

**134.** நிலவின் பெயர் சந்திரிகை யென்ப.

நிலவின் பெயர்:—சந்திரிகை. (௧)

பிறை நிரம்பலின் பெயர்.

**135.** கலைபிறை நிரம்பல் கருதுங் காலே.

பிறை நிரம்பலின் பெயர்—கலை. (௧)

சந்திரன் ஊர்தியின் பெயர்

**136.** வெண்மதி யூர்தி விமான மாகும்.

சந்திரன் ஊர்தியின் பெயர்—விமானம். (௧)

இரவின் பெயர்.

**137.** யாம நத்தம் யாமினி வகுஞ்சஞ்
சாமங் கங்கு னிசா நிசி திமிர
மெல்லியு மல்லு மிரவின் பெயரே.

இரவின் பெயர்—யாமம், நத்தம், யாமினி, வகுஞ்சம், சாமம், கங்குல், நிசா, நிசி, திமிரம், எல்லி, அல். (௧௧)

செவ்வாயின் பெயர்.

**138.** அழலவன் பௌம னங்கா ரகனே
குருதி வக்கிரன் குசனே மங்கல
னார னுதிர னாத்த னறிவ
னழலே யுலோகிதன் செந்தீ வண்ணன்
சேயிவை செவ்வாய் சிறந்த பெயரே.

செவ்வாயின் பெயர்:—அழலவன், பௌமன், அங்காரகன், குருதி, வக்கிரன், குசன், மங்கலன், ஆரல், உதிரன், ஆத்தன், அறிவன், அழல், உலோகிதன், செந்தீவண்ணன், சேய். (௧௫)

புதன் பெயர்.

**139.** அருணன் கணக்க னறிஞன் சாமன்
மதிமகன் மேதை மாறேர்ப் பாகன்
புந்தி தூதன் பசலை புதனே.

|தன் பெயர்:—அருணன், கணக்கன், அறிஞன், சாமன், மதிமகன், மேதை, மால், சோப்பாகன், புந்தி, தூதன், பச்சை. (கக)

வியாழன் பெயர்.

**140.** ஆசான் மந்திரி யாண்டளப் பான்பொன்
பீதகன் சுரகுரு பிரகற்பதி சீவன்
தேவ மந்திரி சிதகன் சிகண்டிசன்
மேவிய வந்தண னரசனும் வியாழன்.

வியாழன் பெயர்:—ஆசான், மந்திரி, ஆண்டளப்பான், பொன், பீதகன், சுரகுரு, பிரகற்பதி, சீவன், தேவமந்திரி, சிதகன், சிகண்டிசன், அந்தணன், அரசன் (கங)

வெள்ளியின் பெயர்.

**141.** தைத்திய மந்திரி சலவியன் சைத்தியன்
மழைக்கோள் சுக்கன் கவி புகர் பிரகரன்
பார்க்கவன் சுக்கிரன் வெள்ளியோன் பளிங்கு
காப்பியன் சிதனே யுசனனெவெள்ளியின்பெயர்

வெள்ளியின் பெயர்:—தைத்தியமந்திரி, சலவியன், சைத்தியன், மழைக்கோள், சுக்கன், கவி, புகர், பிரகரன், பார்க்கவன், சுக்கிரன், ஒள்ளியோன், பளிங்கு, காப்பியன், சிதன், உசனன் (கரு)

சனியின் பெயர்

**142.** கதிர்மக னீலன் சாவகன் காரி
முதுமகன் மேற்கோண் மந்தன் முடவன்
சௌரி பங்கு சந்தில சனிப்பெயர்.

சனியின் பெயர்:—கதிர்மகன், நீலன், சாவகன், காரி, முதுமகன், மேற்கோள், மந்தன், முடவன், சௌரி, பங்கு, சந்தில. (கக)

இராகுவின் பெயர்.

**143.** தமமே கரும்பாம் பேயிராகு வாகும்.

இராகுவின் பெயர்:—தமம், கரும்பாம்பு (உ)

கேதுவின் பெயர்.

**144.** செம்பாம் பேசிகி கொடிகேது வாகும்.

கேதுவின் பெயர்.—செம்பாம்பு, சிகி, கொடி. (ங)

அனந்தன் பெயர்.

**145.** அனந்தன் போக வதிக்கிறை சேடன்.

அனந்தன் பெயர்:—போகவதிக்கிறை, சேடன். (உ)

### வாரத்தின் பெயர்.

**146.** வாசரங் கிழமை வார மாகும்.

வாரத்தின் பெயர்—வாசரம், கிழமை. (௨)

### அச்சுவினியின் பெயர்.

**147.** இரலை பைப்பசி யாழே றுத்தலைநாள்
புரவி மருத்துவ நாளச் சுவினி.

அச்சுவினியின் பெயர்—இரலை, ஐப்பசி, யாழ், ஏறு, தலைநாள், புரவி, மருத்துவநாள். (எ)

### பரணியின் பெயர்.

**148.** காடு கிழவோன் பூத மடுப்புத்
தாழி பெருஞ்சோறு தருமன் முக்கூட்டுப்
போதம் பரணிப்பெயர் தாசியு மாகும்.

பரணியின் பெயர்—காடு, கிழவோன், பூதம், அடுப்பு, தாழி, சோறு, தருமன், முக்கூட்டு, போதம், தாசி. (௧௦)

### கார்த்திகையின் பெயர்.

**149.** அறுமீ னங்கி நாளே யளக்க
ரெரிநா ளாகிரு ளவிதன் வாணன்
றழலே யாரல் கார்த்திகைத் தன்பெயர்.

கார்த்திகையின் பெயர்—அறுமீன், அங்கிநாள், அளக்கர், எரிநாள், அளகு, இருள், நாவிதன், வாணன், தழல், ஆரல் (௧௦)

### உரோகிணியின் பெயர்.

**150.** சகடு விமானஞ் சதியே யூற்ற
லயனோன் வைய முரோகிணி யாகும்.

உரோகிணியின் பெயர்—சகடு, விமானம், சதி, ஊற்றல், அயனோன், வையம். (௬)

### மிருகசீரிடத்தின் பெயர்.

**151.** மாழ்கு மான்றலை மார்கழி நரிப்புற
மதிநாண் முயன்மீன் பாலை வெய்யோன்
மிருகசீ ரிடமைந் தானமும் விளம்பும்.

மிருகசீரிடத்தின் பெயர்:—மாழ்கு, மான்றலை, மார்கழி, நரிப்புறம், மதிநாள், முயன்மீன், பாலை, வெய்யோன், ஐந்தானம். (௯)

### திருவாதிரையின் பெயர்.

**152.** அாறுள் செங்கை மூதிரை யாதிரை.

ருவாதிரையின் பெயர்.—அாறுள், செங்கை, மூதிரை. (௩)

### புனாபூசத்தின் பெயர்.

**153.** அதிதி நாள்கழை யாவண மெரியே
புனர்தங் கருப்பிவை புனர்பூச மாகும்.

னர்பூசத்தின் பெயர்:—அதிதிநாள், கழை, ஆவணம், எரி, புனர்தம், கருப்பு. (௬)

### பூசத்தின் பெயர்.

**154.** குருநாள் காற்குளங் கொடிறு வண்டு
புணர்தை யாகும் பூசநாட் பெயரே.

சத்தின் பெயர்—குருநாள், காற்குளம், கொடிறு, வண்டு, புணர்தை. (௫)

### ஆயிலியத்தின் பெயர்.

**155.** அரவிறுள் கௌவை யாயிலா யிலியம்.

யிலியத்தின் பெயர்—அரவிறுள், கௌவை, ஆயில. (௩)

### மகத்தின் பெயர்.

**156** வேள்வி கொடுநுகம் வேட்டுவன் வாய்க்கா
லாதி யெழுஞனி பிதிர்நாண் மாக
மாசி யெழுவா யெழுஞனி மகப்பெயர்.

கத்தின் பெயர்—வேள்வி, கொடுநுகம், வேட்டுவன், வாய்க்கால், ஆதியெழுஞாயிறு, பிதிர்நாள், மாகம், மாசி, எழுவாயெழுஞசனி. (௯)

### பூரத்தின் பெயர்.

**157.** இடைய தெழுஞனி யெலியே துர்க்கை
பகவதி நாளகணை நாவிதன் பூரம்.

ரத்தின் பெயர்—இடையெழுஞ்சனி, எலி, துர்க்கை, பகவதி நாள், கணை, நாவிதன். (௬)

### உத்தரத்தின் பெயர்.

**158.** பங்குனி கடைய தெழுஞனி பாற்குனி
மானேறு கதிர்நாண் மாரிநா ளுத்தரம்.

த்தரத்தின் பெயர்:—பங்குனி, கடையெழுஞ்சனி, பாற்குனி, மானேறு, கதிர்நாள், மாரிநாள். (௬)

அத்தத்தின் பெயர்.

**159.** கைம்மீன் கைனி கனலி நாளே
யைம்மீன் காமரங் களிறிவை யத்தம்.

*அத்தத்தின் பெயர்:—கைம்மீன், கைனி, கனலிநாள், ஐம்மீன், காமரம், களிறு.* (சு)

சித்திரையின் பெயர்.

**160.** நெய்மீ னறுவை நேர்வான் பயறு
நடுநா டுவட்டா நாளே தச்சன
றெறியி னின்னவை சித்திரைப் பெயரே.

*சித்திரையின் பெயர்:—நெய்மீன், அறுவை, நேர்வான், பயறு, நடுநாள், துவட்டாநாள், தச்சன்.* (எ)

சோதியின் பெயர்.

**161.** விளக்கே மரக்கால் வெறுநுகம் வீழ்க்கை
துளக்கங் காற்றி னாளே சோதி.

*சோதியின் பெயர்:—விளக்கு, மரக்கால், வெறுநுகம், வீழ்க்கை, துளக்கம், காற்றினாள்.* (அ)

விசாகத்தின் பெயர்.

**162.** அனிலநாண் முற்றின் முறம்வை காசி
சுளகுவி சாகத் தொல்பெய ராகும்.

*விசாகத்தின் பெயர்:—அனிலநாள், முற்றில், முறம், வைகாசி, சுளகு.* (கூ)

அனுடத்தின் பெயர்.

**163.** பனைதேள் பெண்ணை புற்றாளி போர்க்கை
யினையவை மித்திர நாளு மனுடம்.

*அனுடத்தின் பெயர்:—பனை, தேள், பெண்ணை, புல், தாளி, போர்க்கை, மித்திரநாள்.* (ய)

கேட்டையின் பெயர்.

**164.** துளங்கொளி வல்லாரை வேதி யெரியழல்
இளந்தவிந் திரனுள் சேட்டையுங் கேட்டை.

*கேட்டையின் பெயர்:—துளக்கொளி, வல்லாரை, வேதி, எரி, அழல், இந்திரனுள், சேட்டை.* (ய)

மூலத்தின் பெயர்.

**165.** கொக்கை தேட்கடை குருகுவி றன்றின்
முறறு மானி யசுரநாண் மூலம்.

மூலத்தின் பெயர்:—கொக்கு, தேட்கடை, குருகு, வில், அன்றில், ஆனி, அசுரநாள். (எ)

பூராடத்தின் பெயர்.

**166.** உடைகுள முற்குள மாரி நீர்நாள்
புகலிற பூராட நீரும புகலும.

பூராடத்தின் பெயர்—உடைகுளம், முற்குளம், மாரி, நீர்நாள், நீர். (௫)

உத்திராடத்தின் பெயர்.

**167.** ஆடி விசசுவ நாளே கடைகுள
மோதிப வானியோ டுததிரா டப்பெயர்.

உத்திராடத்தின் பெயர்—ஆடி, விசசுவநாள், கடைக்குளம், ஆனி (௪)

திருவோணத்தின் பெயர்.

**168.** சோணைமா யோனுண் முக்கோல் சிரவண
மோண மெனப வுலகணையு மாகும்.

திருவோணத்தின் பெயர்:—சோணை, மாயோனுள், முக்கோல், சிரவணம், உலகணை. (௫)

அவிட்டத்தின் பெயர்.

**169.** காகப் புள்ளே வசுக்க ணுளே
யாவணி பறவை யவிட்டப பெயரே.

அவிட்டத்தின் பெயர்—காகப்புள், வசுக்கணுள், ஆவணி, பறவை. (௪)

சதயத்தின் பெயர்.

**170.** குன்று வருண னுள்பெருஞ் செக்குச்
சுண்டன போரிவை சதய நாளே.

சதயத்தின் பெயர்.—குன்று, வருணனுள், செக்கு, சுண்டன், போர். (௫)

பூரட்டாதியின் பெயர்.

**171.** புரட்டாதி முற்கொழுங் கோலே நாழி
யுரைபபர் பாதநாள் பூரட் டாதி.

பூரட்டாதியின் பெயர்:—புரட்டாதி, முற்கொழுங்கோல், காழி, பாதநாள். (௪)

### உத்திரட்டாதியின் பெயர்.

**172.** முரசுபிற் கொழுங்கோன் மன்னன் னீப
முறைசெயி லறிவனு ளுத்திரட் டாதி.

*உத்திரட்டாதியின் பெயர்:—முரசு, பிறகொழுங்கோல், மன்னன், நீபம், அறிவன்.* (௬)

### இரேவதியின் பெயர்.

**173.** கொழுவே நாவாய் தோணி சூலம்
பஃறி புருடநாள் கடைமீ னிரேவதி.

*இரேவதியின் பெயர்:—கொழு, நாவாய், தோணி, சூலம், பஃறி, புருடநாள், கடைமீன்* (௭)

### அருந்ததியின் பெயர்.

**174.** அருந்ததி சாலி வடமீ னாகும்.

*அருந்ததியின் பெயர்:—சாலி, வடமீன்* (௨)

### விடிமீனின் பெயர்.

**175.** விடிமீன் பெயரே வெடியென லாகும்.

*விடிமீனின் பெயர்:—வெடி.* (௧)

### வான்மீனின் பெயர்.

**176.** வான்மீன் பெயரே புசமென லாகும்.

*வான்மீனின் பெயர்:—புசம்.* (௧)

### வான்மீனின் பொதுப்பெயர்.

**177.** சிதமும் பமுஞ் சுக்கையுங் கணமு
முடுவுந் தாரகையு மொளியும்வான் மீனே.

*வான்மீனின் பொதுப்பெயர்:—சிதம், பம், சுக்கை, கணம், உடு, தாரகை, ஒளி.* (௭)

### இராசியின் பெயர்.

**178.** மேடமு மிடபமு மிதுனமுங் கடகமுஞ்
சிங்கமுங் கன்னியுந் துலாமுந் தேளுந்
தனுவு மகரமுங் கும்பமு மீனமு
மெனனும் பெயரிவை யீரா றுள்ளு
மொப்புடை மிதுன மொழிதல் லாதன
வுபபெயர்க் கப்பெய ரனைத்து மாகும்.

மிதுனவீதியாவது.

**185** வில்லு மகரங் குடமே விருச்சிகந்
சொல்லிய மிதுன வீதி யதுவே.

மிதுனவீதியாவது.—தனுசு, மகரம், கும்பம், விருச்சிகம், (௪)

இவற்றுள்.

**186.** சொன்ன விராசி தொகுத்த பாதங்கள்
மன்னிய கதிர்முதற் கோள்வரு நெறியே

இவற்றுள், முன்கூறிய மூன்றிராசிகளுள் இடபமுதல விருச்சிகம் ஈறாகத் தொகுத்த பாதங்களில் சூரியன் முதலிய கிரகங்கள் வரும் வழி.

காலத்தின் பெயர்.

**187.** போழ்துங் கொனும் பொழுதுஞ் செவ்வியும்
எல்லையும் வேலையு மமையமுங் காலையுங்
காலும் பதமுங் கால மாகும்

காலத்தின் பெயர்.—போழ்து, கொன், பொழுது, செவ்வி, எல்லை, வேலை, அமையம், காலை, கால், பதம். (௧௦)

கால நுட்பத்தின் பெயர்

**188.** கலையுந் துடியுங் கணமுமாத் திரையும்
நொடியும் பிதிரு நுட்பமுந் திட்பமு
நிமிடமுங் கால நுட்ப மாகும்

காலநுட்பத்தின் பெயர்.—கலை, துடி, கணம், மாத்திரை, நொடி, பிதிர், நுட்பம், திட்பம், நிமிடம். (௯)

காலவிரைவின் பெயர்.

**189.** கணமுமாத் திரையுங் கால விரைவே.

காலவிரைவின் பெயர்:—கணம், மாத்திரை (௨)

நாழிகையின் பெயர்.

**190** கடிகை விகலை கன்ன லிருத்தை
பதமே நாழி நாழிகை யாகும்.

நாழிகையின் பெயர்:—கடிகை, விகலை, கன்னல், இருத்தை, பதம், நாழி. (௬)

நாளின் பெயர்.

**191.** அல்க றிவாப்பக லானியந் திவசம்
மேல்லை யெல்லைக றினமிவை நாளே.

நாளின் பெயர்—அல்கல, திவா, பகல், ஆவியம், திவசம், எல்லை
எல், வைகல், தினம. (க

முன்னைநாளின் பெயர்.

**192** நென்னலு நெருநலு முன்னைநா ளாகும்.
முன்னைநாளின் பெயர்—நென்னல், நெருநல். (உ

பின்னைநாளின் பெயர்.

**193** பிற்றையும் பின்றையும் பின்னைநா ளாகும்.
பின்னைநாளின் பெயர்—பிற்றை, பின்றை

திதியின் பெயர்.

**194**· திதியே பக்கம்.
திதியின் பெயர்—பக்கம்

மாதத்தின் பெயர்.

**195**· மதியே திங்கள் மாத மாகும்.
மாதத்தின் பெயர்—மதி, திங்கள். (உ)

ஒருகலைவரு மதிநாளின் பெயர்.

**196**· ஒருகலை வருமதி நாளசினீ வாலி.
ஒருகலைவரு மதிநாளின் பெயர்—சினீவாலி (க

அமாவாசையின் பெயர்.

**197**· குகுவமா வாசை.
அமாவாசையின் பெயர்—குகு (க)

முதற்பக்கத்தின் பெயர்.

**198**· பக்க முதலது நந்தை யாகும்.
முதற்பக்கத்தின் பெயர்—நந்தை. (அது வருமாறு க. சு கக நந்தை.)

இரண்டாம் பக்கத்தின் பெயர்.

**199**· பத்திரை யென்பது இரண்டாம் பக்கம்.
இரண்டாம் பக்கத்தின் பெயர்.—பத்திரை. (உ எ. கஉ. பத்திரை )

மூன்றும் பக்கத்தின் பெயர்.

**200** மூன்றே சயை பக்கம்.
மூன்றும் பக்கத்தின் பெயர்:—சயை. (ந. அ கந. சயை )

அவைதாம்,

**210.** ஆவணி முதலா விரண்டி ரண்டாக
மேவிய திங்க ளெண்ணினர் கொளலே.

*அவைதாம்.—ஆவணி, புரட்டாதி-கார்; ஐப்பசி, கார்த்திகை - கூதிர்; மார்கழி, தை-முன்பனி; மாசி, பங்குனி - பின்பனி; சித்திரை, வைகாசி-இளவேனில், ஆனி, ஆடி-முதுவேனில்.* (க)

அறுவகை இருதுவின் பெயர்.

**211.** வசந்தங் கிரீடம் வருடஞ் சாரமே
யேமந் தஞ்சிசிர மென விருதுவா றாகும்.

*அறுவகை இருதுவின் பெயர்—வசந்தம், கிரீடம், வருடம், சாரம், ஏமந்தம், சிசிரம்.* (க)

அவைதாம்

**212.** சித்திரை முதலாச் சென்மாத மிரண்டாய்
வைத்தன வெண்ணிக் கொள்க வெனப.

*அவைதாம்—சித்திரை, வைகாசி - வசந்தம்; ஆனி, ஆடி - கிரீடம்; ஆவணி, புரட்டாதி - வருடம், ஐப்பசி, கார்த்திகை-சாரம்; மார்கழி, தை-ஏமந்தம், மாசி, பங்குனி-சிசிரம்.* (க)

ஆண்டின் பெயர்.

**213** ஆடனஞ் சமை யயனந் தெய்வதம்
வருடம் வற்சர மாண்டின் பெயரே

*ஆண்டின் பெயர்—ஆடனம், சமை, அயனம், தெய்வதம், வருடம், வற்சரம்.* (க)

வாழ்நாளின் பெயர்.

**214** ஆயுக மாயுள் வாழ்நா ளெனப.

*வாழ்நாளின் பெயர்—ஆயுகம், ஆயுள்* (உ)

உகமுடிவின் பெயர்.

**215.** ஊழியு மடங்கலு முகமுடி வாகும்.

*உகமுடிவின் பெயர்—ஊழி, மடங்கல்* (உ)

நால்வகை யுகத்தின் பெயர்.

**216.** கிரேதா திரேதா துவாபரங் கலியென
வொருநான் கென்ப யுகத்தின் பெயரே.

*நால்வகை யுகத்தின் பெயர்.—கிரேதா, திரேதா, துவாபரம், கலி* (ச)

அமுதின் பெயர்.

**217.** அமரியுஞ் சுதையு மருந்து மமுதே.
அமுதின் பெயர்:--அமரி, சுதை, மருந்து. (௩)

தெய்வ வுணவின் பெயர்.

**218.** சருவும் பலியுநி வேதனியமு மமுது
மவியுந் தெய்வ வுணவா குமமே.
தெய்வ வுணவின் பெயர்—சரு, பலி, நிவேதனியம், அமுது, அவி. (௫

ஆலகாலவிடத்தின் பெயர்.

**219** காள கூட மாலகால விடமே.
ஆலகாலவிடத்தின் பெயர்—காளகூடம் (௧)

ஆன்மாவின் பெயர்.

**220** பசுவுயி ரிவன் புற்கலன் சேதன
னணுவிய மான னாதன் செந்து
வாவி பூத னுறவி கூத்த
னென் றின்னவை யான்மா வாகும்.
ஆன்மாவின் பெயர்—பசு, உயிர், சீவன், புற்கலன், சேதனன், அணு, இயமானன், ஆதன், செந்து, ஆவி, பூதன், உறவி, கூத்தன (௧௩)

இரண்டாவது
வானவர்வகை முற்றிற்று.

ஆ சூத்திரம் ௨௱௨௰.

மூன்றாவது

# ஐயர் வகை.

இருடிகள் பெயர்.

**1.** முனிவர் மாதவ ரிருடிகண் முனிவர்
படிவ ருறுவர் பண்ணவ ரைய
ரறவோர் தபோதன ரறிஞ ரந்தணர்
துறவோர் கடந்தோர் மோனியர் யோகியர்
கோபங் காய்ந்தோர் நீத்தோர் மெய்யர்
தாபத ரிருடிகட் பெயரா கும்.

ருடிகள் பெயர்—முனிவர், மாதவர், இலிங்கிகள், முனைவர், ப
வர், உறுவர், பண்ணவர், ஐயர், அறவோர், தபோதனர், அறிஞர்,
அந்தணர், துறவோர், கடிந்தோர், மோனியர், யோகியர், கோபங்
காய்ந்தோர், நீத்தோர், மெய்யர், தாபதர். (௨௦)

சத்தவிருடிகளின் பெயர்.

2. அகத்தியன் புலத்திய னங்கிரா கௌதமன்
வசிட்டன் காசிபன மார்க்கண் டேயனென்
றிசைத்த விவர்தா மேழிருடிகளே.

தவிருடிகளின் பெயர்—அகத்தியன், புலத்தியன், அங்கிரா, கௌ
தமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டேயன். (௭)

அகத்தியன் பெயர்.

3. குறுமுனி கும்ப யோனி யகத்தியன்.

கத்தியன் பெயர்—குறுமுனி, கும்பயோனி. (௨)

சைவதவப்பாலோர் பெயர்.

4. மாவிரதியருங் காளா முகரும
பாசு பதருஞ் சைவதவப் பாலோர்.

சைவதவப்பாலோர் பெயர்—மாவிரதியர், காளாமுகர், பாசுபதர் (௩)

நாராயண சமயத்தார் பெயர்.

5. வைணவர் * பாகவதர் நாராயண சமயத்தோர்.

ராயண சமயத்தார் பெயர்:—வைணவர், பாகவதர். (௨)

சமணர் பெயர்.

6. சாவக ரருகர் சமண ரமணர்.

மணர் பெயர்—சாவகர், அருகர், அமணர். (௩)

சமண்டவத்தோர் பெயர்.

7. ஆசீவகர் தாபத ரத்தவத் தோரே.

மண்டவத்தோர் பெயர்—ஆசீவகர், தாபதர் (௨)

புத்தர் பெயர்.

8. புத்தர் சாக்கியர் தேரர் பௌத்தர்.

த்தர் பெயர்:—சாக்கியர், தேரர், பௌத்தர். (௩)

* "பாகவதர் நாராயண சமயத்தோர்." எனவும் பாடம்.

புத்த தவந்தோர் பெயர்.

**9.** *வைத்த சீவக ரத்தவந் தோரே.*

*புத்த தவந்தோர் பெயர்:—சீவகர்* (க)

சடைமுடியோர் பெயர்.

**10.** *முனிவர் தாபதர் சடைமுடி யோரே.*

*சடைமுடியோர் பெயர்:—முனிவர், தாபதர்.* (உ)

ஒருமையின் பெயர்.

**11.** *ஒருமை யென்ப திறையுணர் வாகும்.*

*ஒருமையின் பெயர்—இறையுணர்வு.* (க)

ஒன்றின் பெயர்.

**12.** *ஒன்றெனப் படுவது வீடு பெறுநிலை.*

*ஒன்றின் பெயர்—வீடுபெறுநிலை* (க)

இருமையின் பெயர்.

**13.** *இருமை யென்ப திம்மையு மறுமையும்.*

*இருமையின் பெயர்.—இம்மை, மறுமை* (உ)

இருவினையின் பெயர்.

**14.** *இருவினை புண்ணிய பாவ மென்ப.*

*இருவினையின் பெயர்—புண்ணியம், பாவம்* (உ)

இருவகைத் தோற்றத்தின் பெயர்.

**15.** *இருவகைத் தோற்றஞ் சராசர மென்ப.*

*இருவகைத் தோற்றத்தின் பெயர்—சரம், அசரம்* (உ)

இருசுடரின் பெயர்.

**16.** *இருசுட ரிரவி மதிய மாகும்.*

*இருசுடரின் பெயர்:—சூரியர், சந்திரர்.* (உ)

இருமரபின் பெயர்.

**17.** *இருமரபு தாய்வழி தந்தைவழி யென்ப.*

*இருமரபின் பெயர்—தாய்வழி, தந்தைவழி.* (உ)

இருவகைக் கந்தத்தின் பெயர்.

**18.** *இருவகைக் கந்த நற்கந்த துர்க்கந்தம்.*

*இருவகைக் கந்தத்தின் பெயர்.—நற்கந்தம், துர்க்கந்தம்.* (உ)

இருவகை அறத்தின் பெயர்.

**19.** இல்லறந் துறவற மிருவகை யறமே.

இருவகை அறத்தின் பெயர்:—இல்லறம், துறவறம். (உ)

இருவகைப் பொருளின் பெயர்.

**20** கல்வியுஞ் செல்வமு மிருவகைப் பொருளே.

இருவகைப் பொருளின் பெயர்:—கல்வி, செல்வம். (உ)

இருவகைக் கூத்தின் பெயர்.

**21.** இருவகைக் கூத்து மார்க்கந் தேசிகம்.

இருவகைக் கூத்தின் பெயர்:—மார்க்கம், தேசிகம். (உ)

மும்மையின் பெயர்.

**22.** மும்மை யும்மையு மிம்மையு மறுமையும்.

மும்மையின் பெயர்:—* உம்மை, இம்மை, மறுமை. (௩)

முப்பொறியின் பெயர்.

**23.** மனமும் வாக்குங் காயமு முப்பொறி.

முப்பொறியின் பெயர்:—மனம், வாக்கு, காயம். (௩)

முச்செயலின் பெயர்.

**24.** படைத்தலுங் காத்தலு மழித்தலு முச்செயல்.

முச்செயலின் பெயர்:—படைத்தல், காத்தல், அழித்தல். (௩)

முக்காலத்தின் பெயர்.

**25.** இறந்த காலமெதிர் காலநிகழ் காலமெனச்
சிறந்த கால மூன்றெனச் செப்புவர்.

முக்காலத்தின் பெயர்:—இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம். (௩)

மூவிடத்தின் பெயர்.

**26.** முன்னிலை படர்க்கை தன்மை மூவிடம்.

மூவிடத்தின் பெயர்:—முன்னிலை, படர்க்கை, தன்மை. (௩)

முக்குற்றத்தின் பெயர்.

**27.** காமம் வெகுளி மயக்கமுக் குற்றம்.

முக்குற்றத்தின் பெயர்:—காமம், வெகுளி மயக்கம். (௩)

---

* உம்மை - கழிபிறப்பு.

### மூவகை மொழியின் பெயர்.

**28.** *பட்டாங்கு பேசல் பழித்தல் புகழ்தல்*
*முட்டின் றுரைக்கு மூவகை மொழியே.*

மூவகை மொழியின் பெயர் — உண்மைகூறல், பழித்தல், புகழ்தல் (௩)

### முக்குணத்தின் பெயர்.

**29.** *சாத்துவிக மிராசத தாமத முக்குணம்.*

முக்குணத்தின் பெயர்.—சாத்துவிகம், இராசதம், தாமதம். (௩)

### அவற்றுள், சாத்துவிக குணம்.

**30.** *ஞானந் தவமே மென்மை நல்லறன் மோனம்*
*வாய்மை பொறைபுல னடக்கல் சாத்துவிகம்.*

அவற்றுள், சாத்துவிக குணம் — ஞானம், தவம், மென்மை, அறன், மோனம், வாய்மை, பொறுமை, புலனடக்கல் (௮)

### இராசத குணம்.

**31.** *தானந் தவமே தருமமே பேணல்*
*ஞானங் கல்வி நலனிவை தெரிந்த*
*வினையிலா விராசத குணமே.*

இராசத குணம் — தானம், தவம், தருமம், பேணல், ஞானம், கல்வி, நலன், கேள்வி (௮)

### தாமத குணம்.

**32.** *நிறைபெருண்டி தீக்கே டுறங்க*
*மறதி பொய்சோம் பொழுக்க மழுவுதல்*
*கொலைபெ வஞ்ச மிவைதா மதகுணமே.*

தாமத குணம் — பெருண்டி, தீக்கேடு, உறக்கம், மறதி, பொய், சோம்பு, ஒழுக்கமழுவுதல், கொலை, வஞ்சம் (௯)

### மூவகைத் தானத்தின் பெயர்

**33.** *முதலிடை கடையென மூவகைத் தானம்.*

மூவகைத் தானத்தின் பெயர் — முதல், இடை, கடை. (௩)

### அவற்றுள், உத்தம தானம்.

**34.** *அறத்தி னீட்டிய வரும்பொருள் புறத்துறைக்*
*குற்ற மொன்று மறுத்தகற் றவர்க்குக்*
*கொள்கெனப் பணிந்து குறையிரந் தவர்வயி*
*னுள்ளமுவந் தீவ துத்தம தானம்.*

பற்றுன், உத்தம தானம்:—தறகதானிட்டிய பொருளை மூக்குற்று மற்ற நற்றவத்தோரைக கொளகெனப் பணிந்து, குறையிரந்து மனமகிழ்ந்து கொடுத்தல.

### மத்திம தானம்.

35. ஆதுல ரந்தக ருறப்பறைக ளாதர்
மாதாக கீவது மததிம தானம்.

மத்திம தானம்:—* ஆதுலர், அந்தகர், † உறப்பறைகள், ‡ ஆதர், மாதா, இவர்களுக்குக் கொடுப்பது. (௬)

### கடைப்படு தானம்.

36. ஆர்வம் புகழ்ந் தச்சங் கைம்மாறு
காரணங் கண்ணோட்டங் கடப்பா டென்றிவை
யேதுவ கடைப்படு தான மென்ப.

கடைப்படு தானம்:—§ ஆர்வம், புகழ், அச்சம், கைம்மாறு, காரணம், கண்ணோட்டம், ¶ கடப்பாடு இவற்றைப்பற்றி யீவது. (௭)

### மூவகைப் பாவ புண்ணிய வழக்கத்தின் பெயர்.

37. செய்தல் செய்வித்த லுடன்பா டென்று
வருமுறை பாவ புண்ணிய வழக்கம்.

மூவகைப் பாவ புண்ணிய வழக்கத்தின் பெயர்:—செய்தல், செய்வித்தல், உடன்பாடு. (௮)

### மூவுலகின் பெயர்.

38. பூமி யந்தரஞ் சுவர்க்க மென்ன
வருமூன் றுலகின் பெயரென வறைவர்.

மூவுலகின் பெயர்:—பூமி, அந்தரம், சுவர்க்கம். (௯)

### முச்சுடரின் பெயர்.

39. திங்கள் வெய்யோ னக்கினி யென்றிவை
மூன்றுஞ் சுடரென மொழிகுவர் புலவர்.

முச்சுடரின் பெயர்.—சந்திரன், சூரியன், அக்கினி. (௰)

### திரிகடுகத்தின் பெயர்.

40. திரிகடுகஞ் சுக்குத் திப்பிலி மிளகு.

திரிகடுகத்தின் பெயர்:—சுக்கு, திப்பிலி, மிளகு (௧௧)

---

* ஆதுலர் - இரப்போர். † உறப்பறைகள் - அவயவமிழந்தவர். ‡ ஆதர்-பற்றுக்கோடில்லாதவர். § ஆர்வம் - விருப்பம். ¶ கடப்பாடு-முறைமை.

திரிபலையின் பெயர்.

**41.** *திரிபலை நெல்லி கடுக்காய் தான்றி.*

*திரிபலையின் பெயர்:— நெல்லி, கடுக்காய், தான்றி.* (க)

நாற்கதியின் பெயர்.

**42.** *தேவகதி மிருககதி மக்கள் கதியே*
*மேவு நரக கதியென நான்கே.*

*நாற்கதியின் பெயர்:—தேவகதி, மிருககதி, மக்கள்கதி, நரககதி* (க)

நால்வகை வேதத்தின் பெயர்.

**43.** *இருக்கு வேத மெசுரு வேதஞ்*
*சாம வேத மதர்வண வேதமென*
*நால்வகை வேத நாம மாகும்.*

*நால்வகைவேதத்தின் பெயர்:—இருக்கு, எசுர், சாமம், அதர்வணம்.* (க)

நால்வகை இழிச்சொல்லின் பெயர்.

**44.** *குறளை கடுஞ்சொல் பயனில சொல்லே*
*மருள்கொள் சொல்லென விழிச்சொ னான்கே.*

*நால்வகை இழிச்சொல்லின் பெயர்—குறளை, கடுஞ்சொல், பயனில் சொல், பொய்சொல்லல* (க)

ஆடவர் நாற்குணத்தின் பெயர்.

**45.** *அறிவு நிறையோர்ப்புக் கடைப்பிடி யென்னத்*
*தகுமிவை யாடவர் தங்குண நான்கே.*

*ஆடவர் நாற்குணத்தின் பெயர்:—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.* (க)

பெண்கள் நாற்குணத்தின் பெயர்.

**46.** *நாணமட மச்சம் பயிர்ப்பென் றின்ன*
*மாணிழை யவர்க்கு வருங்குண நான்கே.*

*பெண்கள் நாற்குணத்தின் பெயர்:—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு.* (க)

நால்வகைப் புண்ணியத்தின் பெயர்.

**47.** *தானங் கல்வி தவமே யொழுக்க*
*நால்வகைப் புண்ணிய நாம மாகும்.*

*நால்வகைப் புண்ணியத்தின் பெயர்:—தானம், கல்வி, தவம், ஒழுக்கம்.* (க)

### உயிர்த் தோற்ற நால்வகையின் பெயர்.

**48.** குடல்போற் பையினு முட்டையினுந் தோன்றியும்
மெய்க்கண் வியர்வினு மிக்க நிலத்தினும்
ஒக்க நால்வகை யுயிர்த்தோற் றம்மே.

யிர்த் தோற்ற நால்வகையின் பெயர்:—பை, முட்டை, வியர்வை, நிலம். (௪)

### நால்வகைப் புலமையின் பெயர்.

**49** கவியே கமகன் வாதி வாக்கியென்
றிவையொரு நான்கும் புலமைக் கியல்பே.

ல்வகைப் புலமையின் பெயர்:—கவி, கமகன், வாதி, வாக்கி. (௪)

### அவற்றுள், கவியின் வகை.

**50.** ஆசு மதுரஞ் சித்திர வித்தார மெனப்
பாவகை பாடுவோன் கவியெனப் படுமே.

அவற்றுள், கவியின் வகை:—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன் கவி என்று சொல்லப்படுவான்.

### கமகன் வகை.

**51.** ஞாபகஞ் செம்பொரு ளுடையதெனப் பொருளுங்
காசின் றுரைப்போன் கமக னாகும்.

கமகன் வகை:—அரும்பொருளைச் செம்பொருளுடையதாகக் காட்டி விவரிப்போன் கமகன்.

### வாதி வகை.

**52.** ஏதுவு மேற்கோளு மெடுத்துக் காட்டித்
தன்கோ ளிறுவிப் பிறர்கோண் மறுப்போன்
மன்பதை மதித்த வாதி யாகும்.

வாதி வகை:—காரணமு மேற்கோளு மெடுத்துக் காட்டிப் பிறர் மதத்தை மறுத்துத் தன்மத நிறுத்துவோன் வாதி.

### வாக்கி வகை.

**53.** அறம்பொரு ளின்பம் வீடெனுந் திறங்கள்
கேட்க வேட்க வினியன கூறு
மாற்ற லுடையான் வாக்கி யாகும்.

வாக்கி வகை:—அறம் பொரு ளின்பம் வீடெனு நான்குறுதிகளைக் கேட்கவும் விரும்பவும் இனியனவாக விரித்துக் கூறுவோன் வாக்கி.

பாட்டு, சித்திரப்பா, விசித்திரப்பா, விகற்பநடை, வினாவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்துவருத்தனம், இவை முதலிய வற்றை வடநூற்பாப்பில் முறைமை தொகைவைத்த உதாரணங்களையாராய்ந்து விரிவுபடக் கூறியவற்றினியலால் * மிறைக்கவியில் வினாவிப் பாடுவது சித்திரகவி.

## வித்தாரகவி வகை

57. மும்மணிக் கோவையும் பன்மணி மாலையு
மறமுங் கலிவெண் பாவு மடலூர்ச்சியு
மியலிசை நாடக மியன்றபல் கவியுங்
கூத்துங் கிரீடையும் பாடாண்டுத் துறையும்
வருத்த வகுப்பும் விருத்தக் கவிதையும்
விரித்துப் பாடுவது வித்தார கவியே.

வித்தாரகவிவகை பெயர்—மும்மணிக்கோவை, பன்மணிமாலை, மறம், கலிவெண்பா, மடலூர்ச்சி, இயல், இசை, நாடகம், பலவகைக்கவி, கூத்து, கிரீடை, பாடாண்டுத்துறை, வகுப்பு, விருத்தக்கவிதை யிவை முதலியவற்றை விரித்துப் பாடுவது வித்தாரகவி.

## நாற்பொருளின் பெயர்

58. அறம்பொரு ளின்பம் வீடெனப் பொருணான் கே.

நாற்பொருளின் பெயர்—அறம், பொருள், இன்பம், வீடு. (௪)

## நால்வகைக் கேள்வியின் பெயர்.

59. கற்றல் கேட்ட லவ்வழி நிற்ற
லொத்த னால்வகைக் கேள்வி யாகும்.

நால்வகைக் கேள்வியின் பெயர்.—கற்றல், கேட்டல், † அவ்வழிநிற்றல், ‡ ஒத்தல். (௫)

## நானிலத்தின் பெயர்.

60. முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையே நால்வகை யாகும்.

நானிலத்தின் பெயர்—முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல். (௬)

## நால்வகைச் சேனையின் பெயர்.

61. யானை தேர்பரி காலா ளென்றிவை
நால்வகைத் தானை நாம மாகும்.

நால்வகைச் சேனையின் பெயர்—யானை, தேர், பரி, காலாள். (௭)

* மிறைக்கவி - சித்திரகவி. † அவ்வழிநிற்றல் - பாவனை.
‡ ஒத்தல் - நிட்டை.

நால்வகைப் பொன்னின் பெயர்.

**62.** சாத ரூபங் கிளிச்சிறை யாடகஞ்
சாம்பூ நதமிவை நால்வகைப் பொன்னே.

நால்வகைப் பொன்னின் பெயர்:—சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம். (௪)

நால்வகைப் பூவின் பெயர்.

**63.** கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு
புதற்பூ வென்றிவை நால்வகைப் பூவே.

நால்வகைப் பூவின் பெயர்.—கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ. (௪)

நால்வகைப் புசிப்பின் பெயர்.

**64.** உண்பன தின்பன நக்குவ பருகுவ
நால்வகைப் புசிப்பி னாம மாகும்.

நால்வகைப் புசிப்பின் பெயர்:—உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. (௪)

நால்வகை யூறுபாட்டின் பெயர்.

**65.** குத்தல் வெட்ட லெய்த லெறிக
லலவன்க யூறு பாடென நவிலவர்.

நால்வகை யூறுபாட்டின் பெயர்:—குத்தல், வெட்டல், எய்தல், எறிதல். (௪)

நால்வகை உபாயத்தின் பெயர்.

**66.** சாம பேத தான தண்டமென
நெறிபடு முபாய நான்கா குமமே.

நால்வகை உபாயத்தின் பெயர்:—சாமம், பேதம், தானம், தண்டம். (௪)

நால்வகை நிலையின் பெயர்.

**67.** பைசாச மாலீட மண்டிலம் பிரதி
யாலீட நால்வகை நிலையா குமமே.

நால்வகை நிலையின் பெயர்:— * பைசாசம், ஆலீடம், மண்டிலம், பிரதியாலீடம். (௪)

பஞ்சபாதகவகைப் பெயர்.

**68.** கொலையே களவு கள்ளுறு நிந்தை
பகரும் பொய்யுடன் பஞ்சபா தகமே.

---

* பைசாச முதலியவற்றின் விரிவைப் பின்னர்க் காண்க.

ஞ்சபாதகவகைப் பெயர்:— கொலை, களவு, கள், குருநிந்தை, பொய். (௫)

## ஐவகை வினாவின் பெயர்.

**69.** *அறியான் வினாவ லறிவொப்புக் காண்ட*
*லைய மறுத்த லவனறிவு தான்கோடன்*
*மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே.*

ஐவகை வினாவின் பெயர்:—அறியான்வினாவல், அறிவொப்புக்காண்டல், ஐயமறுத்தல், அவனறிவுதான்கோடல், மெய்யவற்குக் காட்டல். (௫)

## பஞ்சாங்கவகைப் பெயர்.

**70.** *திதியே வாரநாள் யோகங் கரணமெனப்*
*பகருஞ் சோதிட பஞ்சாங் கமமே.*

ஞ்சாங்கவகைப் பெயர்:—திதி, வாரம், நாள், யோகம், கரணம் (௫)

## பஞ்ச சயனவகைப் பெயர்.

**71.** *மயிர்ச்சேணம் பஞ்சுமெத்தை வண்படாந் தூவி*
*பயிறறுந்தண் வீப்பாய் பஞ்ச சயனம்.*

ஞ்ச சயனவகைப் பெயர் —மயிர்ச்சேணம், பஞ்சுமெத்தை, வண்படாம், அன்னத்தினறாவி, * வீப்பாய் (௫)

## பஞ்ச வாசவகைப் பெயர்.

**72.** *தக்கோல மேல மிலவங்கஞ் சாதிக்காய்*
*கர்ப்பூர மென்றிவை கமழ்பஞ்ச வாசம்.*

ஞ்ச வாசவகைப் பெயர்:—தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கர்ப்பூரம். (௫)

## பஞ்ச பூதவகைப் பெயர்.

**73.** *நிலநீர் தேயு வாயுவா காயமென்*
*றிவைபுல னறிந்தோ ரோத்துமைம் பூதம்.*

ஞ்ச பூதவகைப் பெயர்:—நிலம், நீர், தேயு, வாயு, ஆகாயம். (௫)

## பஞ்சபுலன் பஞ்சேந்திரியங்களின் வகைப் பெயர்.

**74.** *சுவையொளி யூறோசை நாற்ற மறியுங்*
*கருவி நாகண் மெய்செவி மூக்கே.*

ஞ்சபுலன்களின் பெயர்:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். (௫)
ஞ்சேந்திரியங்களின் பெயர்:—நா, கண், மெய், செவி, மூக்கு. (௫)

---

* வீப்பாய் - மலர்ப்பாய்.

### இந்திரியத்தின் பெயர்.

**75.** காரணம் பொறிவாயில் கந்தமிந் திரியம்.

இந்திரியத்தின் பெயர்—காரணம், பொறி, வாயில், கந்தம். (௪)

### ஐவகைக் குசலவித்தையின் பெயர்

**76.** எண்ண லெழுத லிலைகிள்ளல் பூத்தொடுத்தல்
பண்ணமைந்த யாழ்செறுநி குசல வித்தை.

ஐவகைக் குசலவித்தையின் பெயர்—எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல். (௫)

### ஐவகை மெய்க்குற்றத்தின் பெயர்.

**77.** கொட்டாவி கெட்டை குறுகுறுப்புக் கூன்கிடை
கட்டு விழலைந்து மெய்க்குற்றங்கள் நிரைய

ஐவகை மெய்க்குற்றத்தின் பெயர்—கொட்டாவி, கெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, கட்டுவிழல். (௬)

### ஐவகை விரையின் பெயர்.

**78.** கோட்டந் துருக்கந் தகரமகி லாரம்
மோட்டிய வைந்தும் விரையென மொழிபர்.

ஐவகை விரையின் பெயர்—கோட்டம், துருக்கம், தகரம், அகில், ஆரம். (௭)

### ஐவகைத் தந்தையர் பெயர்.

**79.** அரசன் றலைவன் றந்தை முன்னோன்
குரவனோ டைவரு குறிப்பினிற் றந்தை.

ஐவகைத் தந்தையர் பெயர்—அரசன், தலைவன், தந்தை, முன்னோன், குரவன். (௮)

### ஐம்பால்வகைப் பெயர்.

**80.** ஐம்பா லென்ப தொருவ னொருத்தி
பலரொன்று பலவெனப் பகர்ந்தனர் புலவர்.

ஐம்பால்வகைப் பெயர்—ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல. (௯)

### ஐவகை யுணவின் பெயர்.

**81.** கடித்த னக்கல் பருகல் விழுங்கல்
மெல்ல லென்றிவை யைவகை யுணவே.

ஐவகையுணவின் பெயர்:—கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல். (௰)

### பஞ்ச சத்தக்கருவியின் பெயர்.

**82.** தோற்றுளை நரம்பு கஞ்சம் பாடல்
பலபெத பஞ்ச சத்த மாகும்.

பஞ்ச சத்தக்கருவிவகைப் பெயர்:—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி. (௫)

### ஐவகை வேள்வியின் பெயர்.

**83.** கடவுள் பிரமம் பூதம் மானிடம்
தென்புலத் தாரோ டைவகை வேள்வி.

ஐவகை வேள்வியின் பெயர்:—கடவுள்வேள்வி, பிரமவேள்வி, பூதவேள்வி, மானிடவேள்வி, தென்புலத்தார் வேள்வி (௫)

### ஐவகைத் தாயர் பெயர்.

**84.** ஈன்றதா யூட்டுந்தாய் முலைத்தாய் கைத்தாய்
செவிலித் தாயென வைவகைத் தாயர்.

ஐவகைத்தாயர் பெயர்:—ஈன்றதாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் (௫)

### கான்படு திரவியம் ஐந்தின் பெயர்.

**85.** ஆரகி லிறாலே தேனே மயிற்பீலி
நாவி கான்படு திரவிய மைந்தே.

கான்படு திரவியம் ஐந்தின் பெயர்:—ஆரகு, இறால், தேன், மயிற்பீலி, நாவி. (௫)

### கடல்படு திரவியம் ஐந்தின் பெயர்.

**86.** பவள முத்துச் சங்கோ டோர்க்கோலை
யுப்புக் கடல்படு திரவிய மைந்தே.

கடல்படு திரவியம் ஐந்தின் பெயர்:—பவளம், முத்து, சங்கு, ஓர்க்கோலை, உப்பு (௫)

### நாடுபடு திரவியம் ஐந்தின் பெயர்.

**87.** செந்நெல் செவ்விள நீர்சிறு பயறு
கன்னற் கதலி யெனப்பெயர் பெற்ற
வைந்து நாட்டு ளமைந்த திரவியம்.

நாடுபடு திரவியம் ஐந்தின் பெயர்:—செந்நெல், செவ்விளநீர், சிறுபயறு, கரும்பு, வாழை.

நகர்படு திரவியம் ஐந்தின் பெயர்.

88. கண்ணாடி பித்தன் கருங்குரங்கு காட்டானை
மன்னாளும் வேந்தனோ டைந்து திரவியம்.

நகர்படு திரவியம் ஐந்தின் பெயர்:—கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, யானை, வேந்தன். (௫)

மலைபடு திரவியம் ஐந்தின் பெயர்.

89. அகில்மயிர் கோட்ட மொடுதக் கோலங்
குங்கும மைந்து மலைபடு திரவியம்.

மலைபடு திரவியம் ஐந்தின் பெயர்:—அகில், மயிர், கோட்டம், தக்கோலம், குங்குமம். (௫)

ஆறங்கத்தின் பெயர்.

90. மந்திரங் கற்ப வியாகரண நிகண்டு
சந்தோ பிசித நிருத்தஞ் சோதிட
மென்றனை வேதத் தாறங்க மென்ப.

ஆறங்கத்தின் பெயர்:—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். (௬)

நன்னாட்டமைதி அறுவகைப் பெயர்.

91. செல்வம் விளையுள் பல்வளஞ் செங்கோல்
கொல்குறும் பின்மை கொடும்பிணி யின்மையென்
றிவ்வகை யாறு நன்னாட் டமைதி.

நன்னாட்டமைதி அறுவகைப் பெயர்:—செல்வம், விளையுள், பல்வளம், செங்கோல், குறும்பின்மை, பிணியின்மை. (௬)

போகபூமி அறுவகைப் பெயர்.

92. ஆதியரி வஞ்ச நல்லரி வஞ்ச
மேமத வஞ்ச மேம வஞ்சந்
தேவ குருவ முத்தர குருவமெனப்
போக பூமி யறுவகைப் படுமே.

போகபூமி அறுவகைப் பெயர்:—ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம். (௬)

உட்பகை ஆறின் பெயர்.

93. காமங் குரோத மோக முலோப
மதமாச் சரியமுட் பகையா றென்ப.

உட்பகை ஆறின் பெயர்:—காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாச்சரியம். (௬)

அவற்றுள், இயமம் ஆவது:—கொல்லாமை, மெய்ம்மைகூறல், கள்ளாமை, பிறர்பொருட்காதலின்மை, இந்திரியமடக்கல். (௫)

நியமம் ஆவது.

**109.** தவமே சௌசந் தத்துவ நூலோர்தன்
மனமுவந் திருத்தல் தெய்வம் வழிபட
லிவையுங் காலை நியம மாகும்.

நியமம் ஆவது:—தவம், சௌசம், தத்துவநூலோர்தல், பெற்றதுகொண்டு மகிழ்தல், தெய்வம் வழிபடல் (௫)

ஆதனம் ஆவது

**110.** பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சுவத்திகஞ் சுகாதன மென்ப வாதனம்.

ஆதனம் ஆவது:—பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சுவத்திகம், சுகாதனம் (௬)

பிராணாயாமம் ஆவது.

**111.** இரேசக பூரக கும்பக மேற்றி
வாயுவை யடக்கல் பிராணா யாமம்

பிராணாயாமம் ஆவது — பிராணவாயுவை யிரேசக பூரக கும்பகஞ் செய்தல்.

பிரத்தியாகாரம் ஆவது

**112.** உரையா துபாதியை நீக்கி யுபாதியைப்
பிரியா துணை நேசல் பிரத்தியா காரம்.

பிரத்தியாகாரம் ஆவது:—சீவவுபாதியை நீக்கிப் பிரபஞ்சவுபாதியைச் சிவசொரூபமாகப் பார்த்தல்.

தாரணை ஆவது.

**113.** உற்றவைம் பூத மறுதியி லொடுக்கித்
தற்பர னடுத்த றாரணை யாகும்.

தாரணை ஆவது:—முழங்கால், குதம், இதயம், கண்டம், கபாலமாகிய இத்தானங்களிற் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களை யொடுக்கி, அத்தானங்களில் பிரமன் முதலிய பஞ்சமூர்த்திகளையும் பாவித்தல்.

தியானம் ஆவது.

**114.** அவமாம் புலத்தை யடக்கி மனத்தை
சிவயோகஞ் சேர்த றியான மாகும்.

தியானம் ஆவது:—ஐம்புலத்தையும் அந்தக்கரணத்தையு மடக்கிச் சிவயோகஞ் சேர்தல்.

அட்ட மங்கலத்தின் பெயர்.

**119.** கவரி நிறைகுடங் கண்ணாடி தோட்டி
முரசு விளக்குப தாகை யிணைக்கய
லளவில் சிறப்பி னட்டமங் கலமே.

அட்ட மங்கலத்தின் பெயர்—கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல். (அ)

சிறப்பில்லா எண்வகைப் பெயரெச்சத்தின் பெயர்.

**120.** சிறப்பில் சிதடு முறுப்பில பிண்டமுங்
கூனுங் குறளு மூமையுஞ் செவிடு
மாவு மருளு மெனைய மக்கட்
கேயுஞ் சிறப்பிலா வெண்பெய ரெச்சம்.

சிறப்பில்லா எண்வகைப் பெயரெச்சத்தின் பெயர்—* சிதடு, உறுப்பில்பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, † மா ‡ மருள். (அ)

அட்ட கிரியின் பெயர்.

**121.** இமய மந்தர கைலை விந்த
நிடத மேமகூட நீலங் கந்தமென்
றெண்வகை வெற்புக் கியன்ற பெயரே.

அட்ட கிரியின் பெயர்—இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தம். (அ)

அட்ட கணிதத்தின் பெயர்.

**122.** சங்கலி தம்விய கலிதங் குணனம்
பாகாரம் வர்க்கங் கனமூல மெட்டே.

அட்ட கணிதத்தின் பெயர்—§ சங்கலிதம், ¶ வியகலிதம், $ குணனம், || பாகாரம், ** வர்க்கம், வர்க்கமூலம், †† கனம், கனமூலம். (அ)

அட்ட பரிசத்தின் பெயர்.

**123.** தட்டல் பற்ற றடவ றீண்டல்
குத்தல் வெட்டல் கட்ட லூன்ற
லெட்டு முடம்பின் பரிச மாம்.

அட்ட பரிசத்தின் பெயர்:—தட்டல், பற்றல், தடவல், நீண்டல், குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல். (அ)

---

* சிதடு-குருடு. † மா-மிருகத்தன்மை. ‡ மருள் - உறுப்புமயக்கம். § சங்கலிதம்-கூட்டல் ¶ வியகலிதம் - கழித்தல். $ குணனம் - பெருக்கல். || பாகாரம் - பங்கிடல் ** வர்க்கம் - சமமாகிய இரண்டின் பெருக்கம். †† கனம் - சமமாகிய மூவெண்ணின் பெருக்கம்.

நவ மணியின் பெயர்.

124. வைர முத்த மாணிக்கம் பவளம்
மரகதங் கோமே தகமவை டூரியம்
நீலம் புருட ராக மென்ன
ஞாலம் புகழு நவமணிப் பெயரே.

நவ மணியின் பெயர்—வைரம், முத்து, மாணிக்கம், பவளம், மரகதம், கோமேதகம், வைடூரியம், நீலம், புருடராகம். (க)

நவ புண்ணியத்தின் பெயர்.

125. எதிர்கொளல் பணித லிருத்தல்கால் கழுவல்
விரைமலர் தூவல் தூபம் விளக்கே
யறுசுவை யுண்டி யமைந்தோர்க் குதவுதல்
புகழ்ந்தவை புண்ணியத்தி னாம மாகும்.

நவ புண்ணியத்தின் பெயர்—எதிர்கொளல், பணிதல், இருத்தல், கால்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், அறுசுவையுண்டி யமைந்தோர்க் குதவுதல், புகழ்தல். (க)

நவ தாரணையின் பெயர்.

126. நாம தாரணை வச்சிர தாரணை
மாயா தாரணை சித்திர தாரணை
சத்த தாரணை வத்துத் தாரணை
சதுரங்க தாரணை செய்யுட் டாரணை
நிறைவு குறை வாங்கிய வெண்பொருட் டாரணை
நவதா ரணையி னாம மாகும்.

நவ தாரணையின் பெயர்—நாமதாரணை, வச்சிரதாரணை, மாயாதாரணை, சித்திரதாரணை, சத்ததாரணை, வத்துதாரணை, சதுரங்கதாரணை, செய்யுட்டாரணை, நிறைவுகுறைவாங்கிய வெண்பொருட்டாரணை. (க)

நவ தாளத்தின் பெயர்.

127. சமதாள மருமதாள மடதாளம்
படிமதாளஞ் சயதா ளமமே
மட்டிய தாளம் விடதாள நிவிர்த்த
தாளந் துருவ தாள மென்ன
நவதா ளத்தி னாம மாகும்.

நவ தாளத்தின் பெயர்:—சமதாளம், அருமதாளம், அடதாளம், படிமதாளம், சயதாளம், மட்டியதாளம், விடதாளம், நிவிர்த்ததாளம், துருவதாளம். (க)

### நாடக நவரதப் பெயர்.

**128.** சிருங்காரம் வீரியம் பெருநகை கருணை
யிரௌத்திரங் குற்சை சாந்தமற் புதம்பய
நாடகத் தியலு நவரத மாகும்.

நாடக நவரதப் பெயர்—சிருங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம் (௧)

### சிற்பத்தொழிலின் பத்துறுப்பின் பெயர்.

**129.** கல்லு முலோகமுஞ் செங்கலு மரமு
மண்ணுஞ் சுதையுந் தந்தமும் வண்ணமுங்
கண்ட சருக்கரையு மெழுகு மென்றிவை
பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாகும்

சிற்பத்தொழிலின் பத்துறுப்பின் பெயர்—கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், கண்டசருக்கரை, மெழுகு (௰)

### உயிர்வேதனை பன்னிரண்டின் பெயர்

**130.** அனலுஞ் சீதமும் வாதமு மசனியும்
புனலுமா யுதமும் விடமு மருந்தும்
பசியுந் தாகமும் பிணியு முனி வருமையு
முயிரின் வேதனை யோரீ ராறே.

உயிர்வேதனை பன்னிரண்டின் பெயர்—அனல், சீதம், வாதம், அசனி, புனல், ஆயுதம், விடம், மருந்து, பசி, தாகம், பிணி, முனிவருமை. (௧௨)

### பதினெண் யாகங்களின் பெயர்.

**131.** சோதிட் டோம மங்கிட் டோம
முத்தியஞ் சோடசி வாச பேய
மத்தி ராத்திரஞ் சோம யாகஞ்
சாதுர் மாசியம் பவுத்திர மேத
மணிபுண் டரீக மகவி சயனே
பிராச ரூப மசுவ மேதம்
விச்சுவ ஜித்துப் பிரம மேதம்
பிராண மேதம் பாசுபத மெனப்
பாற்படு பதினெண் யாக மென்ப.

பதினெண் யாகங்களின் பெயர்:—சோதிட்டோமம், அங்கிட்டோமம், உத்தியம், சோடசி, வாசபேயம், அத்திராத்திரம், சோமயாகம், சாதுர்மாசியம், பவுத்திரமேதம், சௌத்திராமணி, புண்டரீகம்.

அங்கிரசயம், இராசசூயம், அச்சுவமேதம், விச்சுவசித்து, பிரமமேதம், பிராணவமேதம், பசுபாதம். (கஅ)

### பதினெண் புராணங்களின் பெயர்.

**132.** மச்சங் கூர்மம் வராகம் வாமனம்
பதுமம் வைணவம் பாகவதம் பிரமஞ்
சைவ மிலிங்கம் பௌடிய நாரதீயங்
காருடம் பிரம கைவர்த்தங் காந்த
மார்க்கண் டேயமாக் கினேயம் பிரமாண்டம்
பாற்படு பதினெண் புராண மாகும்.

பதினெண் புராணங்களின் பெயர் — † மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பதுமம், வைணவம், பாகவதம், பிரமம், சைவம், இலிங்கம், பௌடியம், நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம். (கஅ)

### உபபுராணம் பதினெட்டின் பெயர்.

**133.** நார சிங்கஞ் சநற்கு மாரம்
நார தீயம் சிவதன் மந் துருவாசம்
நந்தி கேச்சுர மவுசனங் காளிகம்
வாருணஞ் சாம்பேசம் பராசரம் பார்க்கவம்
காபில மானவம் வாசிட்ட லைங்கம்
சவுர மாரீச பிரமாண்ட மென்னும்
ஈரொன் பானுப புராண மென்ப.

---

* மச்சம், கூர்மம், வராகம், வாமனம், சைவம், இலிங்கம், பௌடியம், காந்தம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் இப்பத்துஞ் சிவபுராணங்கள்; வைணவம், பாகவதம், காருடம், நாரதீயம் இந்நான்கும் விட்டுணு புராணங்கள்; பிரமம், பதுமம் இவ்விரண்டும் பிரம புராணங்கள்; ஆக்கினேயம் அக்கினிபுராணம்; பிரமகைவர்த்தம் சூரியபுராணம்.

† மச்சம் பதினாலாயிரங் கிரந்தம். கூர்மம் ஆறாயிரங் கிரந்தம். வராகம் இருபத்து நாலாயிரங் கிரந்தம். வாமனம் பதினாலாயிரங் கிரந்தம். பதுமம் ஐம்பத்தையாயிரங் கிரந்தம். வைணவம் ஆறாயிரங் கிரந்தம். பாகவதம் பதினெண்ணாயிரங் கிரந்தம். பிரமம் பதினாயிரங் கிரந்தம். சைவம் இருபத்துநாலாயிரங் கிரந்தம். இலிங்கம் பதினோராயிரங் கிரந்தம். பௌடியம் முப்பத்தோராயிரங் கிரந்தம். நாரதீயம் இருபத்தையாயிரங் கிரந்தம். காருடம் ஆறாயிரங் கிரந்தம். பிரமகைவர்த்தம் பன்னீராயிரங் கிரந்தம். காந்தம் இலட்சங் கிரந்தம். மார்க்கண்டேயம் முப்பத்தீராயிரங் கிரந்தம். ஆக்கினேயம் எண்ணாயிரங் கிரந்தம். பிரமாண்டம் பன்னீராயிரங் கிரந்தம்.

உபபுராணம் பதினெட்டின் பெயர்:—நாரசிங்கம், சநற்குமாரம், நா
தீயம், சிவதன்மம், துருவாசம், நந்திகேச்சுரம், ஔசனம், காள
கம், வாருணம், சாம்பேசம், பாராசரம், பார்க்கவம், காபிலம்
மானவம், வாசிட்டலைங்கம், சவுரம், மாரீசம், பிரமாண்டம். ()

## தருமநூல் பதினெட்டின் பெயர்.

134 மநுவே யத்திரி விண்டு வாசிட்டம்
யமமா பத்தம்பம் யாஞ்ஞ வற்கியம்
பாராசர மாங்கிர சமுச னமுமே
காத்தி யாயனஞ் சம்வர்த்தம் வியாசம்
பிரகற் பதிசங் கலிதஞ் சாதா தபமும்
கௌதமந் தக்க மீரொன் பானும்
தரும நூலின் பெயரெனச் சாற்றுவர்.

தருமநூல் பதினெட்டின் பெயர்—மநு, அத்திரி, விட்டுணு, வாசிட்டம், யமம், ஆபத்தம்பம், யாஞ்ஞவற்கியம், பாராசரம், ஆங்கிரசம், உசனம், காத்தியாயனம், சம்வர்த்தம், வியாசம், பிரகற்பதி, சங்கலிதம், சாதாதபம், கௌதமம், தக்கம். (௧அ)

## யாக்கையின் பதினெண் குற்றத்தின் பெயர்.

135. பசியுநீர் வேட்டலும் பயமும் வெகுளியு
முவகையும் வேண்டலு நினைப்பு முறக்கமு
நரையுநோய் படுதலு மரணமும் பிறப்பு
மதமு மின்பமு மதிசயமும் வியர்த்தலுங்
கேத முங்கை யறவு மென்றிவை
மாயயாக் கைக்குப பதினெண் குற்றம்
இக்குற்ற நீங்கினோர் வச்சிர காயர்.

யாக்கையின் பதினெண் குற்றத்தின் பெயர்—பசி, நீர்வேட்டல், பயம், வெகுளி, * உவகை, † வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய்படுதல், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், ‡ கேதம், § கையறவு (௧அ)

மூன்றாவது
ஐயர்வகை முற்றிற்று.

---

ஆ. சூத்திரம் ௪௪௭.

---

* உவகை - மகிழ்கூர்தல் † வேண்டல் - குறையிரத்தல். ‡ கேதம் - துன்பம் § கையறவு - செயலறுதல்.

